# வேதாந்த டிண்டிமம்.

(வேதாந்தப் பேரிகை).

செய்யுளும் - உரையும்.

கோவிலூர்

ஸ்ரீ சுட்டய்ய சுவாமிகள்.

சச்சிதானந்தம் பிரஸ்,

சென்னை.

விலை அணா 4.

## வியாஸ தாத்பர்ய நிர்ணயம்.

(இதுகாறும் தமிழில் வாராதது.

சம்ஸ்கிருதத்தில் அய்யண்ண தீக்ஷிதரென்னும் பெரிய வித்துவானால் வசநவடிவமாக இயற்றப்பட்டுள்ளது. அதன் முதற் பரிச்சேதத்தில் சகல வாதிகளையும் பக்ஷபாத மின்றி வாதிப் பிரதிவாதி மத்தியஸ்த பூர்வகம் கண்டித்து வியாஸ பகவானது தாத்பர்யம் அத்வைதமே என ஸ்தாபிக்கப்பட் டிருக்கின்றது. இரண்டாம் பரிச்சேதத்தில் பிரஹ்மப் பிராப்தி அமூர்த்தரூப சகுணப் பிரஹ்மத்தானேயே ஆகும் ஏன மற்றையோர்களைக் கண்டித்து நன்கு ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றது. இது சம்ஸ்கிருத முணர்ந்தார்க்கன்றி மற்றையோருக்குப் பயன் படாமை கருதி, கோவிலூர் ஸ்ரீகாசிகாநந்த சுவாமிகளால் தமிழில் வசநவடிவமாக மொழி பெயர்க்கப்பட் டிருக்கிறது.

இது போன்ற சாஸ்திரம் இதுகாறும் தமிழிலில்லை யென்பதும் ஒருதலையே-ஆகலின், வேதாந்திகளெல்லோரும் இதர மதஸ்தரைக் கண்டித்தற்கு இப்புத்தகம் மறந்துங் கைவிடாது வைத்தற் குரியதாகும். இதனை வாசிப்போர்க்கு இதன் கெம்பீரத் தன்மை வெளிப்படும். **விலை அணு எட்டு.**

| | ரூ | |
|---|---|---|
| விஷ்ணு புராணம் | 2 | 8 |
| அத்யாத்மராமாயணம் | 2 | 8 |
| குமாரதேவசாஸ்திரம் | 0 | 10 |
| பஞ்சதசப் பிரகரணம்-வசனம் | 1 | 0 |
| வள்ளலார் சாஸ்திரம் | 1 | 8 |
| இந்து பைபில் | 1 | 12 |
| மதவிருஷம் | 1 | 12 |
| பிரபஞ்ஜோற்பத்தி | 2 | 0 |
| நாலாயிரப் பிரபந்தம் | 3 | 10 |
| கம்பராமாயணம் வசனம் 2 - வால்யம் படத்துடன் | 6 | 0 |
| வாக்யசுதையென்னும் திருக்குத்திருசிய விவேகம்-மூலமும்-உரையும் | 0 | 2 |

உ

மகாகணபதியே நமஃ.

# வேதாந்த டிண்டிமம்.

இது
கோவிலூர் மடாதிபதியாயெழுந்தருளியிருந்த
திருக்களராண்டவனென்னும்
ஸ்ரீலஸ்ரீ
வீரசேகரஞானதேசிகரின்
பாதசேகரராய
ஸ்ரீசுப்பய்ய சுவாமிகளவர்களால்
சம்ஸ்கிருதத்தினின்றும்
தமிழில்
செய்யுளும் - உரையு மியற்றப்பட்டு,

மங்கலம் - ஷண்முக முதலியாரவர்களால்

சென்னை,
கோமளேசுவரன்பேட்டை,
சச்சிதாநந்த அச்சியந்திரசாலையிற்
பதிப்பிக்கப்பட்டது.

1915.

காப்பிரைட்] [விலை அணா 4

உ

சிவமயம்.

ஓம் மகா கணபதயே நம:

# வேதாந்த டிண்டிமம்.



திங்களை யணிந்த சிவபிரான் குமரன் றேசிகத் திருவுரு வமதா, யங்கண்மா நிலத்தில் வீரமா தவனேன் றவதரித் தின்பமே யடைவான், எங்களுக் கருள்செய் மறைமுடி முரசை யாவருமெளிதினி னுணர்வான், றங்கவன் பதத்தைச் சந்ததம் பணிந்தே தண்டமிழ்க் கவிதையாற் புகல்வேன்.

## மங்கலம்.

எப்பர வேக தத்துவ மதனை யெழின்மறை முடியின்டிண் டிமங்கள், ஒப்பறப் புகழ்ந்து துதி புரிந் தேதனை யுயரடி யவர்தமக் கருளும், அப் பெரு மொளியாந் தக்ஷிண மூர்த்தி யரும்பெயர்க் குரவனேன் னெதிரிற், றிப்பிய மாக வெழுந்தருள் புரியத் தினந்தினம் பணிந்துவாழ்த் துவனே.

## நூல்.

1. இனிய போத்துருப் போக்கிய விலக்கண முடைத்தாய்த், தனிசே யான்மவ னுன்மப தார்த்தங்க ளிரண்டாம், உனுமவ் வாத்துமாப் பிரமமே யுடன்முத லலவா, மெனும றைமுடி முரசறை டிண்டிம மிவையே.

(இதன் பொருள்.) போத்திருத் தன்மை யிலக்கணம் வாய்ந்ததும், போக்கியத் தன்மை யிலக்கணம் வாய்ந்ததுமாய ஆன்மா அனான்மா வெனப் பெயரிய இரண்டு பதார்த்தங்களுள வாம். அவற்றுள்:—ஆன்மாவென்பது பிரஹ்ம மேயாம், ஆகாதிகளன்றுமென்க; எனவே ஆகாதிகள் அனான்மாக்களெனப்பெறும் என் னு மிவற்றையே வேதாந்தப் பேரியானது டிம் டிம் என அறைவதா மென்றுணர்க. 1

2. அவிரு மான்மனுக் கருண்முத்தி பந்தங் களளிக்கும், புவியின் ஞானவஞ் ஞானமேன் பொருளிரண் டாகும், அவையுண் ஞானத்தி ஞன்முத்தி யல்லலா மயலா, லிவண்ம றைமுடி முரசறை டிண்டிம மிவையே.

(இ - ள்.) மோக்ஷத்தையும் பந்தத்தை யும் கொடுப்பனவாய ஞானம் அஞ்ஞானமெ ன்னு மிரண்டு பொருள்களுள்ளன. அவ்விரண் டனுள், ஞானத்தால் முத்தியுண்டாம்; அஞ் ஞானத்தால் பந்தமுண்டாம் என்னு மிவற்றை யே வேதாந்த முரசு டிம் டிம் என அறைகின் றதென்க. 2

3. இகழி லங்குவ திலக்குவ தேனும்வடி வுடைத்தாம், புகழு ஞாதுரு ஞேயமேன் பொரு ளிரண் டேளவாம், மகிழு ஞாதுரு பிரமமா மகி

முதன் ஞேயம், முகிழ் மறைமுடி முரசறை டிண்டிம மிவையே.

(இ - ள்.) *விளக்குவது, விளங்குவது என்னும் இலக்கணம் வாய்ந்தனவாய ஞாதுரு ஞேய மென்னும் இரண்டு பொருள்கள் உள. அவற்றுள், ஞாதுரு பிரஹ்மமாம்; ஞேயம் உலகமாம் என்பவே வேதமுடி முரசறையும் டிண்டிமமென் றுணர்க.* 3

4. பிரிய வப்பிரி யங்களைப் பிறங்கவே பயக்கும், அரிய வின்பமுந் துன்பமு மாம்பொரு ளிரண்டுண், டேரிய வின்பமெய்ப் பிரமமா முலகுதுன் பமதாந், தெரிம றைமுடி முரசறை டிண்டிம மிவையே

(இ - ள்.) *பிரியாப்பிரியங்களைச் செய்யும் இன்பம், துன்பம் என்னும் பொருள்க ளிரண் டுளவாம். அவற்றுள், இன்பம் பிரஹ்மமாம்; துன்பம் உலகமாம் என்னு மிவையே செய்யா மொழிமுடி முரசறை டிண்டிம மென்க.* 4

5. சருவ சம்மத மாகிய சமட்டியே வியட்டி, யுருவ மாகிய பதப்பொரு ளுளவிரண் டுணர்மி, னருவ வீச்சுரன் சமட்டியா மாருயிர் வியட்டி, திரும றைமுடி முரசறை டிண்டிம மிவையே.

(இ - ள்.) *யாவருக்குஞ் சம்மதமாகிய சமஷ்டி, வியஷ்டி என்னும் இரண்டு பொருள்கள்*

*உள்ளன. அவற்றுள், சமஷ்டி ஈசுவரராம்; வியஷ்டி ஜீவனும் என்னுமிவையே மாமறை முடிமுரசு கோஷிக்கும் டிண்டிமமாம்.* 5

6. வத்து கத்துரு வடிவதந் திரங்களாய் வயங்குஞ், சுத்த ஞானகன் மங்களேன் சொற் பொருளிரண்டாஞ், சுத்த ஞானத்தான் முத்தி யாந் தொழில்களா லன்றும், முத்தி யோத்தந்த முரசறை டிண்டிம மிவையே.

(இ-ள்.) *வத்து தந்திரமாய ஞானமும், கர்த்துரு தந்திரமாய கன்மமும் எனப்பதார்த் தங்கள் இரண்டுளவாம். அவற்றுள், ஞானத் தான் முத்தியுண்டாம், கருமத்தாலின்றாம்; (நிட்காமியமாய்க் கருமமியற்றின் சித்தசுத்தி வாயிலாய் நன்மை பெறலாமென வுணர்க). என்னுமிவை மாமறைமுரசு கோஷிக்கும் டிண் டிமமாம்.* 6

**7.** வினவத் தக்கது தகாதது வெனச்சுகந் துயரை, யனிச முய்ப்பன வாகிய பொருளிரண் டவற்றுள், வினவத் தக்கது பிரமமாம் வேறல வலவாம், எனம றைமுடி முரசறை டிண்டிம மிவையே.

(இ-ள்.) *சுக துக்கங்களைக் கொடுப்பன வாய கேட்கத்தக்கது கேட்கத்தகாதது என் னும் இரண்டு பொருள்களுண்டு. அவற்றுள்,*

கேட்கத்தக்கது பிரஹ்மமேயாம், அயலல்லவே யல்லவாம் என்னுமிவை வேதாந்தப் பேரியில் முழங்கும் டிண்டிமமா மென்ப. 7

8. அறலி ளேப்பினை யுறலிளேப் பளிப்பன வாய,நிறை கருதுறுங் கருதுறு நெடும்பொரு ளிர ண்டா, முறைக ருதுறல் பிரமமே யோழிந்தன வலவாம், இறைம றைமுடி முரசறை டிண்டிம மிவையே.

(இ - ள்.) விசிராந்தியைக் கொடுப்பதும், கொடாததுமாய, சிந்திக்கத்தக்கது தகாதது என்னும் இரண்டு பொருள்களுண்டு. அவற் றுள், சிந்திக்கத்தக்கது பரப்பிரஹ்மமேயாம் மற்றதன்றும் என்பவே வேதாந்தப் பேரிகோ ஷிக்கும் டிண்டிமமாமென் றுணர்க. 8

9. மதிச மாதியை மற்றதை மருவுற வழங் கு, மதிதியேயமு மத்தியே யமுமென விரண்டா, மதிதி யானிக்கத் தக்கது பிரமமே மற்றன், றித ம றைமுடி முரசறை டிண்டிம மிவையே.

(இ - ள்.) மதியானது சமாதியையும் அச மாதியையும் அடையுமாறு செய்யும் தியானிக் கத்தக்கதும் தகாததுமாய இரண்டு பொரு ளுண்டு. அவற்றுள், தியானிக்கத்தக்கது பிர ஹ்மமேயாம், மற்றதலவே யன்றும். இவையே

மாமறை முடிமுரசு அறையும் டிண்டிமமா மென்க. 9

10. யோகி யாயினும் போகியே யாயினு முயர்தி, யாகி யாயினு மிராகியே யாயினும் வீட் டைச், சோக மாமுணர் வுறினுறுந் தொலேயை ய மிலேயாம், ஏக மாமறை முரசறை டிண்டிம மிவையே.

(இ-ள்.) யோகியா யிருப்பினும், போகி யாயிருப்பினும், தியாகியாயிருப்பினும், இரா கியாயிருப்பினும், சோகம் பாவனேயாற் பிர ஹ்மஞானத்தை யடைந்தால் முத்தி சித்திக் கும்; ஐயமின்றும் என்னுமிவை மறைமுடி வாய முரசு முழக்கும் டிண்டிமமாமென் றுண ர்க. 10

11. பிரம ஞானம தின்றியே பெரியவீ டது தான், வருண வாசிர மங்களாம் வளர்வளங் களி னுற், கரும மோடுபோ சனேகளாற் கதுவுறன் முடி யா, திரைம றைமுடி முரசறை டிண்டிம மிவை யே.

(இ-ள்.) பிரஹ்மஞானமின்றி, வருணு சிரம சங்கேதங்களாலும் கர்மோபாசனே முத லியவற்றுலும் மோக்ஷமுண்டாக மாட்டாது என்பவே வேதாந்த முரசு முழக்கும் டிண்டி மமாம். 11

12. துனைய சத்திய மாகியே தோடர் சுவைப் போலி, முதல வற்றினுற் குறையுறு மும்மையா முலகை, நோதுமல் செய்துக நுத லிய பிரமமே யுணர்க,விதம றைமுடி முரசறை டிண்டிம மிவையே.

(இ - ள்.) *அசத்தியமாய சருவ சம்சார மும் இரச ஆபாசாதியாற்றூஷிதமாம் (சார மற்றதென்பதாம்); ஆகையால் அவற்றை உபே க்ஷை செய்குக; பிரஹ்ம மொன்றையே தனது வடிவமா யுணர்க என்னுமிவையே மறைமுடி முரசறையும் டிண்டிமமாம்.* 12

13. பயன றுந்தொழில் பயனற மொழி களைப் பகர்தல், பயனில் வாதங்கள் பயனறு மெண்ணங்கள் பாறி, பயனு றமொரு பிரமமே பற்றிநின் றுணர்மின்,இயைம றைமுடிமுரசறை டிண்டிம மிவையே.

(இ-ள்.) *பிரயோசனமற்ற தொழில்களைச் செய்வதையும், பிரயோசனமற்ற மொழிகளைப் பேசுவதையும், பிரயோசனம் சிறிதுமில்லாத வாதங்கள் செய்வதையும், பிரயோசன மணுவு மில்லாத எண்ணங்களைக் கோடிகோடியா யெ ண்ணுவதையும் முற்றிலும்விட்டொழித்துஎப் போதும் அனர்த்த நிவிருத்தி ஆனந்தப் பிரா ப்தி வடிவமாய பிரயோசன சொரூபப் பிரஹ்ம*

மொன்றையே உங்கள் ஆன்ம சொரூபமாய்ச் சாக்ஷாத் கரிக்கச்சதா நிட்டைசாதிமின் என்னுமிவையே வேதாந்தப் பேரியானது கம்பீரமாய் முழக்கும் டிண்டிமமா மெனவுணர்ந்து கொள்க. 13

14. சிவவ டிவமாய்ச் சீவனு நிலையுறச் சிவமும், நவவு யிர்வடி வாகியே நிலையுற நலமா, யவம றப்பெறன் முத்தியா மானந்த மாகு,மிவண் ம றைமுடி முரசறை டிண்டிம மிவையே.

(இ - ள்.) ஜீவனது இலக்ஷிய சொரூபமானது சிவனது இலக்ஷிய சொரூபமாய்த் திதி பெறுமாறும், சிவனது இலக்ஷிய சொரூபமானது ஜீவனது இலக்ஷிய சொரூபமாய்த் திதி பெறுமாறும் சந்ததம் காணல்வேண்டும் (நிதித்தியாசித்தல் வேண்டுமென்பதாம்). இதனுற் றற்பதத்தே நிகழும் பரோக்ஷத்தன்மையும், துவம்பதத்தே நிகழும் பரிச்சின்னத்தன்மையும் நீங்கும் வாயிலாய்ப் பேரானந்தப்பெரும் வீடடையலாமென்னு மிவையே மறைமுடி முரசறை டிண்டிம மென்ப. 14

15. சிவவடிவமாய்ச் சீவனை யுணருக சிவத்தை, நவவு யிர்வடி வாயுற நண்ணுக நவின்ற, அவையி ரண்டுடை யயிக்கியம் முத்தியே யாகு, மிவண்ம றைமுடி முரசறை டிண்டிம மிவையே.

(இ - ள்.) முன்னிகழ்த்திய நிட்டையாம் நிதித்தியாசனத்தை இடைவிடாது கைக்கொண்டொழுகி முடிவில் ஜீவனைச் சிவவடிவமா யுணர்தல் வேண்டும். அங்ஙனமே பிரஹ்மமாகிய சிவத்தை ஜீவ வடிவமா யுணர்தல் வேண்டும். இவ்விரண்டின் ஐக்கிய ஞானத்தையே முத்தியென்னப்படும். எவ்வித முயல்வாலேனும் இதனையே சரீர மெடுத்த ஒவ்வொருவரும் அடைதல் வேண்டும் என்னு மிவையே நிகமாந்தமாகிய முரசு முழக்கும் டிண்டிமமாம். 15

16. சருவ நல்வடி வாற்பரம் பிரமமே சததம், சிரவ ணம்புரி பவனுடை யுருவமாய்த் திகழும், ஒருவ கைத்துய ருண்மையை யுணர்வதி லிலையா,லிருமறைமுடி முரசறை டிண்டிம மிவையே.

(இ - ள்.) எவ்வாற்றானுராய்ந்து நோக்கினும் சச்சிதாநந்த நித்திய பூரணப் பரப்பிரஹ்மமே யாதொரு தடையு மின்றி எந்த ஞான்றும் உபநிடத அர்த்தங்களைச் சிரவணம் செய்யும் அதிகாரியின் சொரூபமாம். உண்மையாயும் அண்மையாயு மிராநின்ற தன்னுடைய வடிவத்தை யுணர்வதின்கண் யாதொரு ஆயாசமும் இன்று மென்று வேதாந்த முரசு டிம் டிம் என்று கோஷிக்கு மென்க. 16

17. இகப ரங்களிற் புரிதரு மிருவினே யே வையும், மிகுது யர்தரு மேனவிடுத் தோருதுயர் மிலேயாச், சுகசி வமோரு பொருளேயே துணிந்து சேர்ந் துணர்க, திகழ்ம றைமுடி முரசறை டிண் டிம மிவையே.

(இ - ள்.) இகலோகத்திற் சுகமாயிருக்க வேண்டிச் செய்யா நின்ற உழவு, தொழவு, வரைவு, வாணிபம், சிற்பம், வித்தை என்பன வும், பரலோகத்திற் சுகமாயிருக்க வேண்டிச் செய்யா நின்ற யாக, தான, தப, ஓமம் என்பன வும், மிகுந்த துயரைத் தருமெனப் பன்முறை ஆராய்ந்து வாசனேயற விடுத்துத் தாபத்திரயங் களுமற்ற சற்சிற் சுகவடிவ பரசிவத்தையே தைரியத்தோடும் சற்சங்கவாயிலா யறிந்து உய்க என்பவே மறைமுடி முரசு கோஷிக்கும் டிண்டிம கோஷங்க ளென்ப. 17

18. நுண்மை திண்மைய வாகிய தசை களி னுவலும், வண்மை யத்வைத துவைத வா தங்களோ ரிரண்டாம், அண்மை யத்வைத வாதத்தான் மோக்ஷமே யாகும், எண்ம றைமுடி முரசறை டிண்டிம மிவையே.

(இ - ள்.) தூல திருஷ்டியை யடைந் திருந்த காலத்தும், சூக்ஷ்ம திருஷ்டியை யடைந்திருக்குங் காலத்தும் சேர்ந்திருப்பன

வாய சர்வப் பிரமாண பூஷித அத்வைத வாதம் எனவும் அதன் சாதனமாய துவைதவாத மெ னவும் வாதங்க ளிரண்டுள. அவற்றுள், தன் னுண்மைவடிவத்தை உரையா நின்ற அத்வைத வாதத்தான் மோக்ஷ அடைவுண்டாம்; மற்ற தோ, மனத்தூய்மையையும் மன ஒருமையை யும் தரும் வாயிலாய் அதன் சாதனமாமென்ப. (ஸ்தூல திருஷ்டியால் பிரபஞ்சம் தனக் கன்னி யமாய்த் தோற்றா நிற்கும். சூக்ஷும திருஷ்டி யாலோ யாவும் தன் மயமாய்த் தோற்றும்; ஆதலின் எவ்வாற்றானும் முயன்று சூக்ஷும திருஷ்டியையே அதிகாரிகள் அவசியம் சம் பாதித்தல் வேண்டும் என்பது கருத்தாம்) என் னு மிவற்றையே நிகமாந்த முரசு நிரந்தரம் டிம் டிம் எனக் கோஷிக்கும் என்க. 18

19 வினைபு ரிபவர் திரும்புவர் விதிவழி சேபுபா,சனைபு ரிபவர் திரும்புவர் சற்சுக வொளி யாங், தனைய றிபவர் திரும்பிலர் திரும்பிலர் சர தம்,எனம றைமுடி முரசறை டிண்டிம மிவை யே.

(இ - ள்.) யாக தான ஓமாதிகளைச் சகாமி யமாய்ச் செய்யும் புருஷர் மேலுலகத்தை யடைந்து அமுதாதி போகங்களைச் சிறிது காலம் புசித்து மீளவும் பூவுலகின் கண் ணை

கருமானு சாரமாப் பிறவிபெடுப்பான் திரும்புவர். விராட்முகலிய வற்றின் உபாசனைகளை வேதத்தில் விதித்தபடி சகாமியமாய்ச் செய்யும் அதிகாரிகள் மேலினும் மேலாய வுலகத்தை யடைந்து விரும்பிய போகங்களை நெடுங்காலம் புசித்துத்திரும்புவர். அவரும் பூவுலகின் கண்ணே பிறவி யெடுப்பதில் யாதோரையப் பாடுமின்றும். சச்சிதாநந்த நித்திய பூரண பரசிவமாகிய தேகக் குகையிலுறையும் தமது வடிவத்தை அசம்பாவனை விபரீதபாவனைகளற உணர்பவர் யாண்டும் செல்லாமையின் (வாசனையறலால் அவரது பிராணன் வெளிக்கிளம்பாமல் உலையிரும் புண்ட நீர் போல் உடலுக்குள் வளைபட்ட சேதனத்தின் கண்ணே லயமாதலின்) அவர் திரும்புவதின்றும் என்று திரமுற உணர்கவென்னு மிவையே வேதாந்த முரசு கோஷிக்கும் டிம் டிம் என்னும்கோஷங்களாமென் றுணர்க. 19

20. கரும முற்பயன் போய்யதாய்க் காணுஞ்தததுவாம், அருமை ஞானத்தின் பயனப ரோக்கமேய் யாதும், உரிமை யாதலி னுணர்வையே பயிலுக வுயர்ந்தோர், இரும றைமுடி முரசறை டிண் டிம மிவையே.

(இ - ள்.) கரும உபாசனைகளின் பயனே ரேபாக்ஷமாம், அழிவை யுடையதாம், மீண்

டும் பிறப்பிற்கேதுவாம். அருமையான தன் வடிவ சிவஞானத்தின் பயனே அபரோக்ஷமாம்(கைகண்ட பலமாம்). அஃதாவது சுவானுபூதியிற் றெரியத் தக்கதாம்; என்றும் அழியாததாம்; அடைந்த அனர்த்த நிவிருத்திரூப ஆநந்தவடிவம் என்று மழியாமையின். ஆதலின், சாதன சதுட்டய சம்பன்னர் மெய்ஞ்ஞானத்திற்குரிய சிரவண மனன நிதித்தியாசனங்களையே முயன்று பயிலுக என்பவே வேதாந்த முரசு டிம் டிம் என் றறையுங் கோஷங்களாம். 20

21. அறிஞ ரிச்சிர மம்பய னற்றதே யாகுங்,
கறைக ருமியிச் சிரமமும் பயன்றனைக் கதுவா,
அறிவ றிதரு மெய்யுணர் வில்லரே யாயின்,
இறைம றைமுடி முரசறை டிண்டிம மிவையே.

(இ - ள்.) அகண்ட சச்சிதாநந்த அமலப் பிரஹ்மத்தை யுணர்ந்திலராயின் எத்தகைய விவேகிகளேனு மெடுத்துக்கொள்ளும் கற்றல் கேட்டல் முதலியவற்றின் எத்துணைச் சிரமமும் எள்ளளவு பயனையும் பயவாதாம். கருமிகளா லாற்றப்படுங் கருமத்தின் கண்ணுப சிரமமும் கடுகளவு பயனையும் பயவாதாம். ஆதலின் எக்காரியங்கள்செய்யினும்மெய்ஞ்ஞானமடைய உத்தேசித்தே செய்யின் நலமாம் என்னும்

இவையே இறைவனுலாற்றிய அனுதிஅபௌரு ஷேயமாய வேதத்தின் முடிவாய முரசு முழக் கும் டிம் டிமமாமென் றுணர்க. 21

22. அலம கத்தினு லலமரு யோகமா மத னுல், அலம யின்றதா லலமள வறுந்தனங் களினுல், நிலையு றும்பரப் பிரமத்தை நெஞ்சினே யுணரின், எலேம றைமுடி முரசறை டிண்டிம மிவையே.

(இ - ள்.) யாகத்தினுற் கிடைத்த அக்கி தியபலன் இனி அமையும்; அரிய யோகத் தினுல் கிடைத்த சித்த ஒருமைப்பாடு முத லிய பலன்களும் சித்திமுதலனவும் இனியமை யும். இதுகாறும் புசித்த போகங்களா லுண் டாய பலமு மினி யமையும். அளவற்ற தன ங்களினுல் மகிழ்வடைந்ததுவு மினியமையும். இத்தகைய அமைதியானது எத்தகைய வத் துவை உணர்ந்த பின் உண்டாம் கொல் லெனின்? என்றும் பொன்றுத பரிபூரணப் பர மாநந்த தேஜோமயமாகிய அத்விதீய பரப் பிரஹ்மத்தை இருதயத்தின் கண்ணே தனது வடிவமாய் ஐயந்திரிபறச் சாக்ஷாத் கரிக்கின் ஆம் என்க. என்னுமிவையே யாவரையும்நியா மகப்படுத்தும் மறை முடிவாய முரசு முழக் கும் டிம் டிம ஓசைகளா மென்றுணர்க. 22

23. அலம றைகளா லலமரு நூற்களா மவ ற்ருல், அலமி ருதிக ளரும்புரா ணங்களா மவற் ருல்,நிலையு றும்பரப் பிரமத்தை நெஞ்சினி னுண ரின், எலைம றைமுடி முரசறை டிண்டிம மிவை யே.

(இ - ள்.) அரிய வேதங்களை அத்தியய னஞ் செய்தலால் செய்வித்தலால் கிடைக்கும் பலனும் இனியமையும். அருமையாய வேதத்தி னங்கங்களைப் படித்தலால் கிடைக்கும் பயனு மினியமையும். அருமையாய சாஸ்திரங்களைப் படிப்பதாற் கிடைக்கும் பலனு மினியமையும். அருமையாய ஸ்மிருதிகளைப்படித்தலாற் கிடைக்கும் பலனு மினியமையும். அருமையானபுரா ணங்களைப்படிப்பதால் கிடைக்கும் பலனு மினி யமையும். இவ்வாறுறும் சாந்தியானது எவ் வாறுண்டாமெனின், நித்தியமாய், நிர்மலமாய், நிர்க்குணமாய், நிஷ்கிரியமாய், நிரந்தரஞ் சுக வடிவமாய் இலங்கும் பரப்பிரஹ்ம சொரூபத் தை நெஞ்சின் கண்ணே ஆகாதிகளை அகம் அலவென நீக்கி அகமென உணரின் அன்றே யாமென்க, என்னுமிவையே அபரிமிதமாய மாண்பை யுடைய உபநிடத முரசானது டிம் டிம் என்றறையுங் கோஷங்களாம். 23

24. பயனி ருக்குவா லிலையஜு ஷாலுமே பயன்ருன், ஈயம ணுவிலைச் சாமமு மங்ஙனே

நாடின், உயும்பி ரமநல் லான்மவின் னுணர்வது வுதிக்கின், இயன்ம றைமுடி முரசறை டிண் டிம மிவையே.

(இ - ள்.) பாதங்களாற் கட்டப்பட்ட காயத்ரியாதிச் சந்தவிசிஷ்டங்களாய இருக்குகளை அத்தியயனம் செய்வதாலும் பொருடெரிதலாலும் பயனில்லை. கீதவிசிஷ்ட சாமங்களை அத்தியயனம் செய்வதாலும் பொருடெரிதலாலும் பயனில்லை. இவ்விரண்டினும் வேறாயவாய யசுர்க்களை அத்தியயனம் செய்வதாலும் பொருடெரிதலாலும் பயனில்லை. எஞ்ஞான்றெனின், உயர்ந்த பிரஹ்மான்ம ஞானமுண்டாய்விடின் எனக. என்னும் இவையே வேதாந்தமுரசு டிம்டிம் எனக் கோஷிக்கும் கோஷங்களாம். 24

25. வினைகள் யாவையும் விரிமனத் தூய் மையின் பொருட்டாம், தனியு பாசனை சலிமன வொருமையைச் சார்வான், நனிபி ரமவிஞ் ஞானமோ நல்கமுத் தியினை, இனிம றைமுடி முரசறை டிண்டிம மிவையே.

(இ - ள்.) யாக தான ஓமாதிய சர்வ கர்மங்களும் சுற்றுஞ் சித்த சுத்தியின் பொருட்டாம். ஒப்பற்ற உபாசனை சஞ்சலமான மனத்தை யொருமுகப்படுத்தற் பொருட்டாம். பிரஹ்மாத்ம அப்பிரதிபந்த அபரோக்ஷ சாக்ஷாத்

*காரமோ அனர்த்தநிவிருத்தி ஆனந்தப் பிரா ப்தி வடிவ முத்தியடைவித்தற் பொருட்டாம் என்னும் இவற்றையே மாதுர்ய சுபாவத்தை யுடைய வேதமுடி முரசு டிம்டிம் என ஆனந் தத்துடன் கோஷிக்கும்* 25

26. சிதையு மெய்யுணர் வழலினுற் சேர் ந்தநீள் வினைகள், சிதையு மேல்வினை யாவை யுஞ் சிவ ணுகர் வினையோ, சிதையிற் சித்தமி லனுபவஞ் சேறிதலால் வீடாம், இதம றைமுடி முரசறை டிண்டிம மிவையே.

*(இ - ள்.) மெய்ஞ்ஞானத் தீயால், நெடுங் காலமாய்ச் சம்பாதித்துச் சேர்ந்துள்ள சஞ் சித கர்மங்கள் பஸ்மமாம். ஆகாமிய கர்மங்க ளோ, அகர்த்தா யான் என்னும் ஞானத்தால் நாசமாம். பிராரப்த கர்மங்களோ, பற்றின் றிப் புசித்ததால் ஒழியும்; ஒழியவே, தடையின்றிய வழி ஞான சமஸ்காரத் தானே விட்சேப அம்சம் கெடும்; கெடவே விதேக முத்தியுண்டாம் என்னும் இவையே ஆகமா ந்த முரசு அனுதினம் முழக்கும் டிண்டிம முழ க்கமா மென்ப.* 26

27. அறமு ஞற்றலா லாக்கமு மறமலா மற த்தை, நிறையு ஞற்றலா லழிவது நித்திய வசங் கப், போறிய றிகிலா வான்மாஎன் னட்டரைப்

பொருந்தா, இறைம றைமுடி முரசறை டிண்டிம மிவையே.

(இ - ள்.) தர்மத்தைச் செய்தலான் விருத்தியும், அதர்மத்தைச் செய்தலான் ஹானியும், நித்திய அசங்க நின்மல அப்பிரமேய அசலவமல ஆன்மாவின்கண் ஆரூடராய சகசநிட்டரைத் தீண்டமாட்டா என்பவே நிகமாந்த முரசு டிம்டிம் என முழக்கும் முழக்கமாமென்ப. 27

28. மதிக துவுற மருவிய மறச்செய லேவையும், மதிக துவற மருவிய மறச்செய லேவையும், சிதைவு றச்செயுஞ் செயலகோ சிற்சுக வுணர்வாம், இதம றைமுடி முரசறை டிண்டிம மிவையே.

(இ - ள்.) புத்தி பூர்வகமாய்ச் செய்த பாவகர்மங்கள் யாவும், அபுத்தி பூர்வகமாய்ச் செய்த பாவகர்மங்கள் யாவும், அழிந்தொழிவதற்காகச் செய்பத்தக்க செயல் யாதெனின், அற்புதமன்றே! சிற்சதானந்த சிவபெருமானைத் தன்வடிவமாய்ச் சாக்ஷாத்காரம் செய்யுஞ் செயலாம் என்னுமிவையே யாவருக்கும் இதத்தையே உபதேசிக்கும் எழுதாமறைமுடி முரசு டிம்டிம் என முழக்கும் முழக்கமாமென்ப. 28

29. திருக்கி ஞேடுறுந் திருசியந் திகழ்பொரு ளிரண்டாம், இருக்கு மொன்றற்கொன் றெண் ணும்வேற் றுமையினை யியைந்தே, திருக்கொரு சிவம் திருசிய மாயையயே யாகும், இருக்கின் மா முடி முரசறை டிண்டிம மிவையே.

(இ - ள்.) இவ்வுலகின்கண்ணே திருக் கென்றும், திருசியமென்றும் இரண்டுபொரு ள்க ளுள்ளனவாம். அவையோ பரஸ்பரம் வே ற்றுமையை ஏற்று நிற்கும். அஃதாவது:—திரு க்கானது சச்சிதானந்த நித்திய பூரணமா யிருக்கும்; திருசியமானது அசத்து, ஜட, துக்க, அநித்திய, கண்டாமா யிருக்கும். அத்தகையன யாவையெனின், உரைக்கப்படு கின்றது :—திருக் வஸ்துவானது ஒப்பற்ற பரிபூர்ண பரமானந்த பரமசீதள பரமசிவமே யாம். திருசிய வஸ்துவானது சர்வதுக்கங்களை யும் பயக்கும் மாயையும் மாயாகாரியங்களாய தேகாதிகளுமாம் என்னு மிவையே இருக் கென்னும் வேதசிகரமாய முரசு கோஷிக் கும் டிம்டிம் என்னும் கோஷங்களாம். 29

30. உயிர வித்தையை யுபாதியேன் றுடை யது வாகுஞ், சேயிர்சேய் மாயையு பாதியேன் றுடையது சிவனும், பயில வித்தைமா யைக்கு ணம் பாறிய தேகம்,சேயின்ம றைமுடி முரசறை டிண்டிம மிவையே.

(இ - ள்.) அவித்தையை உபாதியாகவுடைய சேதனம் சீவனெனப்படும்; மாயையை உபாதியாகவுடைய சேதனம் ஈசுவரனெனப்படும். நவின்ற அவித்தைமாயை, அதன் குணங்கள் என்பனவற்றின் சம்பந்தமற்றது யாதோ அதுவே சுத்த சுகமாய பரசிவ மெனப்படும். ஆதலின் அத்தகைய சுத்த சொரூபத்தையே அதிகாரிகள் இனிது முயன்று தமது வடிவமாய் உணர்ந்து கோடல்வேண்டும்; உணர்ந்து கொள்ளினே அவற்றால் வருந்துயர் யாதொன்று மணுகாதாம் என்னுமிவற்றையே ஒருவராலும் செய்யப்படாது அநாதியாய் நிகழும் வேதமுடிபாய முரசு டிம்டிம் எனக் கோஷிக்கு மென்ப. 30

31. எதுவு ருவோடு மருவமு மருவியே யிருக்கும், எதுகு ணமோடு நிர்க்குண மருவியே யிருக்கும், அதுப ரமநற் பிரமதத் துவமதா யமரும், இதம றைமுடி முரசறை டிண்டிம மிவையே.

(இ-ள்) எந்த வஸ்துவானது ஆகாரத்தோடு கூடி நிகழுமோ, எந்த வஸ்துவானது நிராகாரமா யிலங்குமோ, எந்த வஸ்துவானது நிர்க்குணமா யிலங்குமோ, எந்த வஸ்துவானது குணத்தோடுகூடி யிலங்குமோ, அந்த வஸ்து சச்சிதாநந்தமயப் பரப்பிரஹ்மமே யாம்; அதுவே சர்வான்மகமா யிருத்தலின். உபாதி

யோடு கூடிச் சாகார சகுணமாயும், உபாதியற்று நிராகார நிர்க்குணமாயும் நிலவுமென்பது அபிப்பிராயமாம் என்னு மிவற்றையே மறைமுடி முரசானது டிம் டிம் எனக் கோஷியா நிற்குமென் றுணர்ந்து கொள்க. 31

32. விதிப யிறலாற் றுவிஜனும் வேத மோ துதலான், மதிகோள் விப்பிரன் மங்கல வமலமெய்ப் பிரம, மதிபே றுதலாற் பிராமணப் பான்மையை மருவும், இதம றைமுடி முரசறை டிண்டிம மிவையே.

(இ-ள்) விதிப்பிரகாரம் வினைகளை வழுவாமற் சிரத்தையோடும் செய்தலால் இருபிறப்பாளத் தன்மை யுண்டாம்; குருமுகமாய் வேதாத்தியயனம் செய்தலால் விப்பிரத் தன்மை யுண்டாம். மங்கலமாய்ச் சகல மலரகிதமாய்ச் சத்திபசிற் சுகமாய் இலகும் பிரஹ்ம சொரூபத்தை யுணர்தலால் பிராஹ்மணத் தன்மையை மருவும் என்னும் இவையே தர்மத்தையும் பிரஹ்மத்தையும் பிரதிபாதிக்கும் அநுதி அபௌருஷேயமாய வேதாந்த முரசானது டிம்டிம் எனக் கோஷிக்கும் ஓசைகளாம். 32

33. பிரம மியாவுமாய் நிலைபெறு மிவணெலா வுலகும், பிரம மாகவே நிலைபெறுங் காரிய மேவையும், அருமை யாகிய காரணந் தனினய

லலவாம், இரும றைமுடி முரசறை டிண்டிம மிவையே.

(இ-ள்) பிரஹ்ம வஸ்துவானது எல்லாப் பொருள்களாயு மிருக்கும், எல்லாப் பொருள் களுமோ பிரஹ்ம சொரூபமாயே நிலைபெற் றிருக்கும். என்னை? காரியமெவையுங் காரண த்தினின்றும் வேருய் விளங்காமையின். உயர்ந் த சத்தையோடுகூடிய காரணத்தினின்றேனும் சமானசத்தையோடு கூடிய காரணத்தினின் றேனும் தோற்றுநின்ற காரியமானது காரண த்தினும் வேருய்க் கண்டிலேம்; பழுதைப் பாம்பு, மட்குடம் போலவாம். உண்மையிலோ யாண்டும் சேதனமே காரணமாகலின் விவாத மே யின்றும் என்னு மிவற்றையே மறைமுடி முரசு டிம் டிம் எனக் கோஷியா நிற்கும். 33

34. உண்டி லகுற லின்பமேன் றுரைத் திடு மூன்று, மேண்டி சையுள யாவினு மிலங்குறு மதனுன், மண்டி யாவையும் பிரமநல் வடிவ மாய் மலரும், பண்டைச் சோன்முடி முரசறை டிண்டிம மிவையே.

(இ-ள்) இருத்தல், இலங்குதல், இன்பமா தல் என்று வழங்கும் மூன்றும் எல்லாத் திசைகளினு முள்ள சர்வ பதார்த்தங்களிடத் தும் இலங்கா நிற்கும். அக்காரணத்தான் எல் லாப் பொருள்களும் பிரஹ்ம சொருபமாயே

ஒளிரா நிற்கும். அஸ்தி, பாதி, பிரியம், ரூபம், நாமம் என்னும் ஐந்தன் வடிவமாம் உலகமென்ப. அவற்றுள் முதன்மூன்றும் அபாத்தியப் பிரஹ்மாங்கிசம், பின்னிரண்டும் பாத்திபமாய மாயாங்கிசம்; பின்னிரண்டுங் கற்பிதமாதலின், கற்பிதத்திற்கு அதிஷ்டானசத்தையினு மதிரித்த சத்தை யின்மையின், முன்மூன்றுய அதிஷ்டான வடிவமேயாம் என்னுமிவற்றையே மறைமுடி முரசு டிம் டிம் எனக் கோஷியா நிற்கும். 34

35. எதுத னக்குறு மவத்தைகள் மும்மையு மினிதாய், விதமு றவிளை யாடிடு மிடமதாய் விரவு, மதிக துவதே பிரமமேன் றுண ருக மயனீத், திதம றைமுடி முரசறை டிண்டிம மிவையே.

(இ - ள்.) எந்த வஸ்துவிற்கு ஆரோபித புண்ணியபாவ மிசிர கருமத்தால் உண்டாம் நனவு கனவு துயில் என்னும் மூன்று அவஸ்தைகளும் இன்பமாகப் பலவகையாய் விளையாடுவதற்கு இடமாய் நிற்குமோ அத்தகைய சுத்த புத்திகோசர வத்துவே பிரஹ்ம வடிவமென் றுணருக. எங்ஙனமெனின், அசம்பாவனை விபரீதபாவனைகளற வென்க. அசங்க ஆன்மாவிற்குறும் விளையாட்டும் உபாதியாலாயதேயாம். அதனுற்றன் உண்மையுணர்ந்த பெரி

யார்க்கும் யாதொன்று மருவாத தென்ப தாம். வருமதிகாரிகளும் அத்தகையவஸ்துவை யே யகமெனவுணரின் சர்வ அனர்த்தங்களும் நீங்கிச் சுகமாயிருத்தல் கூடுமென்பதொருதலை யேயாம் என்னுமிவற்றையே மறைமுடி முரசு டிம் டிம் எனக் கோஷியா நிற்கு மென்க. 35

36. எதுமு தலினி லிலைமுடி பினினு மே யிலையாம், அது இடையினி லிலங்கினு மசத்ததே யாகும், விதித மாதலி னுலகெலாம் வெறும்பொய்யே யாகு, மிதம றைமுடி முரச றை டிண்டிம மிவையே.

(இ - ள்.) எவ்வஸ்துவானது ஆதியி லில் லாததாமோ, எவ்வஸ்துவானது அந்தத்திலில் லாததாமோ அது மத்தியில் இருப்பது போற் றோன்றினு மில்லாததே யாகும். எக்காரணத் தாலது அசத்தாமோ அக்காரணத்தாலது அத் தியந்தம் மித்தையேயாகும். இரஜ்ஜு அவச் சின்ன சேதனத்தின் கண்ணே கற்பிதமாய சர்ப்பமானது முன்னும் பின்னும் இல்லாது மத்தியிற் றோற்றுதலின் ஆண்டுமது இல்லாத தேயாம். ஆதலி னது அத்தியந்தம் மித்தை யாம். அதுபோல, பிரஹ்ம சேதனமாய நம் மிடத்தே மாயாமனத்தாற் கற்பிக்கு முன்ன ரில்லாததாய் அகண்டப் பிரஹ்மாகாரவிருத்தி ஞானம் உண்டானபின்ன ரில்லாததாய் இடை

யில் இலகா நிற்கு மிப்பிரபஞ்சமானதுஇடையி னும் இல்லாததேயாகும். ஆதலின், இஃதும் அத்தியந்தம் மித்தையாம்.இத்தகைய அத்திய ந்தம் மித்தையாய வுலகத்தே ஆசக்தியுறுமல் அகண்டானந்த அமல அத்விதீய வத்துவின் கண்ணே மனத்தை நிலைபெறுமாறு நிறுவிச் சந்ததம் சகசநிட்டைபெற்று இன்புறல் வேண் டும் என்னு மிவற்றையே, இதத்தையே யுப தேசிக்கும் வேதமுடிபாகிய முரசானது டிம் டிம் என யாவருங்கேட்டின்புற முழக்குமென் றுன்றே ரறைவர். 36

37. எது முதலினி லிருந்திடு முடிபினு மிருக்கு, மெது விடையினு மிலங்குறுஞ் சுயமதா யினிதே, அதுபி ரமமே யேகமே யவ்வி து மேய் யே, இதம றைமுடி முரசறை டிண்டிம மிவை யே.

(இ-ள்.) எந்த வத்துவானது காரியமுண் டாவதற்கு முன்னரிருக்குமோ, எந்த வத்து வானது காரியம் அழிந்த பின்னரும் இருக் குமோ, எந்த வத்துவானது காரியந் தோற்று றுங் காலத்தும் தோற்றும் வத்துவிற்குச் சத் தாஸ்பூர்த்தியை (இருப்பு விளக்கத்தை)க் கொ டுத்துக்கொண்டு சுயமாய் அஃதாவதுநிரபேக்ஷி கமாய் அஃதாவது தன் பிரகாசத்தே மற்றென் றை யபேக்ஷியாததாய்இலங்காநிற்குமோ, அந்த

வத்துப் பிரஹ்மமேயாம். அதுவுமொன்றே யாம். இந்தப் பிரத்தியக் வஸ்துவின் வடிவமா யிராநின்றஅஃதாவது தேகத்துறையுங் கூடத்த வடிவமா யிராநின்ற அந்த வத்துச் சத்தியமே யாம். ஈண்டுக் கூடத்த வடிவமாய்ப் பிரஹ்மத் தைச் செப்பியது பரோக்ஷமயல் நீக்கும் பொ ருட்டாம். இங்ஙனம் கூடத்த வத்துவைப் பிர ஹ்ம வடிவமாய்ச் சிந்தைசெய்யின் பரிச்சின்ன மயல் நீங்குமென் றுணர்க. உண்மையாய இதனைவிட்டு மருளல் வெண்மையேயாம் என் னும் இவற்றையே மாதாவை நிகர்த்த வேதா ந்த முரசு டிம் டிம் என நிரந்தரங் கோஷிக் கும். 37

38. புருட ரால்விழை வுற்றிடும் பொருள் கண்முன் றதனற், றிருட மாய்வளை பட்டவர் திரிபசு வாவர், தெருட ருமுத்தி விழைந்தவன் சிறந்தவ னுவன், இரும றைமுடி முரசறை டிண்டிம மிவையே.

(இ - ள்.) புருடர்களாலே அவாவப்பட்ட அறம் பொருள் இன்பம் என்னு மூன்று புரு டார்த்தங்களால் திடமாய்க் கட்டுப்பட்ட புரு டர்கள் கேவலம் மிருகங்களேயாவர். என்னே? அவை மூன்றும்,பிரத்தியக்ஷத்தானும், வினையா லுண்டாவது அழியு மென்னும் அனுமானத் தானும், புண்ணியத்தாற் பொருந்தியபொன்

னுலகும் பொன்று மென்னும் சுருதியானும், அநித்தியங்களாதலின். அத்தகைய அநித்தியங்களை விரும்பித்திரிபவர் ஓரிருகாற் பசுக்களே யாவரென்க; இரண்டிற்கும் பேதமின்மையின் என்றுணர்ந்து கொள்க. ஞானத்தாலுண்டாம் அழியாத பேரின்ப வீட்டின்கண்ணே ஆசைவைத்த அதிகாரியானவன் மிகவும் மேன்மை மிக்கவனுவன். என்னை ? நித்தியமாயதைப் பகுத்துணர்ந்து அதனை யடைவான் குருசிசுருஷைபாதியின் கண்ணே முயன்று வருந்திச் சிரவணுதிகள் செய்து கொண்டிருத்தலினென்க. அவன் பிறப்பே உயர்ந்ததாம்; மற்றவற்றின் பிறப்பெல்லாம் தாழ்ந்தவாம் என்பதை ஜனனந்தீர்ந்தோருடைய பிறப்புயர்ந்ததாம், கிழவேசரிப் பிறப்பாமொழிந்தவெல்லாம் என்னும் ஆதிகுரவன் மொழியாலறிந்து கொள்க. இவற்றைபே பெருமை பொருந்திய வேதாந்த முரசு டிம்டிம் என்றுகோஷியாநிற்குமென்க. 38

39. மண்ணுருவமே மாத்திர மடிகடம் பானை, கண்ணுதட்டிய முதலன வேவையுமே கபேபப், பண்ணுறும்பல வுலகமும் பரப்பிர மமதே, யேண்ணு மாமறை முரசறை டிண்டிம மிவையே.

(இ - ள்.) கடம், பானை, கருதா நின்ற சுவர் முதலனவாய காரியங்கள் யாவும் காரணமாகிய மண்ணுருவ மாத்திரமேயாகும். என்னை? காரணத்தை விடுத்துக்காரியங்கள் சொன் மாத்திரமாகவே யிருப்பன வாதலினானும், முன்னும் பின்னும் இல்லாதனவாய், இடையினும் தோற்றன்மாத்திரமாயிருப்பனவாதலினானும் என்றுணர்க. இதுபோலவே, மாயாசக்தியின் வயத்தாற் சேதனத்தின் கண்ணே விவர்த்தமாகத் தோற்றுநிற்கும் சகலவுலகங்களும் பரப்பிரஹ்ம ஸ்வரூபமேயாம். என்னை? அதிஷ்டானத்தின் கண்ணே தோற்றுநின்ற விவர்த்த பதார்த்தங்கள் அனவரதங் கற்பிதங்களேயாதலின், கற்பிதமாய அவற்றிற்கு அதிஷ்டான சத்தையினும் அயற்சத்தை சித்தியாமையானும், அதிஷ்டானவடிவமாகவே அவை சேடித்து நிற்றலானும் என்றுணர்க. புனலிடத்தே தோற்றுநின்ற தரங்கபேனபுற்புதாதிகள் அப்புனலன்றிப் புழுதியாவது முண்டோ? அதுபோலச் சேதனத்திடத்தேதோற்றும் சகசீவபரங்கள்சேதனமன்றி அயலொன்றுமோவென இவண் ஊகித்துக் கொள்ளக்கிடந்தமையையுங் கண்டுகொள்க. என்னு மிவற்றையே வேதாந்த முரசானது டிம்டிம் என யாவருங் கேட்கக் கோஷியா நிற்குமென்க. 39

40. ஆறினைக் கொன்று வென்றுமுன் றினையட ரிரண்டை, வேறெ னப்பிளந் தகி லத்தும்வே றதே யான, ஆறு மொன்றறிந் தமர் தலே யறைமறை மோக்ஷம், ஏறு மாமறை முர சறை டிண்டிம மிவையே.

(இ-ள்.) காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாற்சரியம் என்னும் அரிஷட் வர்க்கத்தைக் கொன்று (இவற்றை வாசனை யின்றிவிடுத்து), புண்ணியகருமம், பாவகரு மம், மிசிரகருமம் என்னும் மூன்றினையும் வெ ற்றிகொண்டு, (புண்ணியகருமத்தே பல இச் சையை விடுத்து என்பது இரகசியம்), இக லோக ஆசை, பரலோக ஆசை என்னும் இர ண்டையும் அத்தியந்தம்விட்டு, யாவற்றிற்கும் வேறாக விளங்கும் சாந்தஸ்வரூபமாய ஏக அத் விதீயப் பிரஹ்மத்தை அப்பிரதிபந்த அபரோ க்ஷ சாக்ஷாத்காரம் செய்திருத்தலே சுருதியுள் ளறையும் மோக்ஷமாம். இதனினும் அதிகம் யாதொன்று மிலதாம். என்னை? யாவையும் இத னுக்கே அங்கமாய் நிகழுதலின் என்றுணர்க. என்னும் இவையே வேதாந்தப் பேரியானது டிம் டிம் என முழக்கும் முழக்கங்களாம். 40

41. ஆறினைப்பிளந் தைந்தையும் பிளந் துமே நான்கை, மாறெ னப்பிளந் தம்மவோ மூன்றையு மடித்து, வேறென விடுத் திரண்

டினை விரவுக வேகம், ஏறு மாமறை முரசறை டிண்டிம மிவையே.

(இ - ள்) ஜரை, மரணம், பசி, தாகம், சோகம், மோகம், என்னும் ஷடூர்மிகளையும் பிளந்தெறிந்து, ஜீவான்மாப் பரமேசுவரரினும் வேறென்றும், ஆன்மாவின் கண்ணே தோற்றும் கருத்திருத்தன்மை முதலியன வுண்மையென்றும், மூன்று சரீரங்களாலும் வரைந்து கொண்ட ஆன்மா சங்கமுடைய தென்றும், உலக காரணத் தன்மையானே பிரஹ்மத்திற்கு விகாரித் தன்மை யுண்டென்றும், காரணத்தினும் வேறாய்க் காணப்பட்ட பிரபஞ்சம் உண்மை யென்றும், எண்ணும் பஞ்சப் பிரமங்களையும் பிளந்தெறிந்து, சித்த விருத்தி நித்திரையைப் பற்றும் இலயம், சித்த விருத்தி அன்னியத்தைப் பற்றும் விக்ஷேபம், சித்த விருத்தி இராகாதி வாசனையின் வசமாம் கஷாயம், சித்த விருத்தி சவிகற்பச் சுகத்தைச் சுவைக்கும் இரசாஸ்வாதம் என்னும் சமாதி விக்ன சதுஷ்டயத்தையும் முபன்று பிளந்தெறிந்து, சிரவணுதி காலத்தே தோற்றும் சர்வஜடவஸ்துவின் சாக்ஷாத்காரமாய பூதப்பிரதிபந்தம், பாவகருமத்தா லுண்டாம் காரியம் விருத்தி யாதலாய வர்த்தமானப் பிரதிபந்தம், ஒரு புருடனிடத்தே தயை விசுவாசம் முதலியவற்றை ஏற்றும்

ஆற்றலே யுண்டாக்கும் நுகர்வினைச் சேடமாய ஆகாமியப்பிரதிபந்தம், என்னும்பிரதிபந்தத்திர யத்தையும் பிளந்தெறிந்து, அஞ்ஞான மிரண்டையும்,ஐயமிரண்டையும்,அசம்பாவனை யிரண்டையும், விபரீத பாவனை யிரண்டையும் அத்தியந்தம் விடுத்து(இயம்பிய இருமைகளை வேதாந்த சம்ஞை விளக்கத்தின் கண்ணே விரிவாய்க் காண்க). ஏக அத்விதியமாய பிரஹ்மத்தையே தனதுருவமாக அறிந்து அனர்த்தங்களி னின்றும் நீங்கி ஆனந்த வடிவமா யிருக்குக என்னும் இவற்றையே வேதாந்த பேரியானது டிம்டிம் என்று யாவரு மின்புறக் கேட்குமாறு கோஷியா நிற்குமென் றுணர்க. 41

42. தேகம் யானல யானருந் தேகியே யான, தேக சாக்ஷியாமெனவுணர் திடத்தினன் மடம்போய், மோக மாம்பிறப் பிறப்பறு முத்தியே யுண்டாம், ஏக மாமறை முரசறை டிண்டிம மிவையே.

(இ - ள்.) சருமாதி ஆறுதத்துவங்களால் யாக்கப்பெற்ற இம்மல மூத்திர பாண்டமாங் தூலசரீரமாகிய நடைப்பிணம் யானன்றும். என்னை ? சதா துர்க்கந்தத்தோடு கூடியிருத்தலினும், துயர்மயமா யிருத்தலினும், கணத்தில் அழிவுறுவதா யிருத்தலினும், பரிச்சின்ன பரிமாணத்தோடு கூடியிருத்

தலினுனும், சாவயவமா யிருத்தலினுனும், போகாலயமாயிருத்தலினுனும், எனதெனக் காணப் படுதலினுனும், மற்றும் பிறவானுமென்க. தேகத்திற்கிறைவனுப்த் தேகத்தை நடாத்தும் தேகியேயானுவன், யானே தேக சாக்ஷியாவன். தேகியே யான தேகசாக்ஷியானென வுணர்ந்த திடத்தினுனே (தேகியென்றது தேகத்திற் கிறைவனென்றபடி. தேக சாக்ஷியென்றது சாக்ஷித்தன்மையானே பரிபூரணத்தைத் தெரிவித்தபடியாம்; ஆகவே ஐக்கியஞான திடத்தினுல்) அஞ்ஞானமானதுநீங்கி, அஞ்ஞான காரியமாய மோகத்தால் உண்டென்று மதித்துள்ள ஜனனம் மாணம் என்பனமுதலிய இடர்யாவும் நீங்கி ஆனந்தமயமாய முத்தியேயுண்டாம் என்னும் இவையே வேதாந்தப் பேரி கோஷிக்கும் டிம்டிம் என்னுங் கோஷங்களாமென் றுணர்க. 42

43. ஓடு யிர்ப்புயா னலனகமோளிர்தருந் தேவன், வாடு யிர்ப்பினற் சான்றேன வயங்கு நிச் சயத்தாற், கூடு மிப்பசி தாகத்தின் குலவுப சாந்தி, தேடு மாமறை முரசறை டிண்டிம மிவையே.

(இ - ள்.) சந்ததம் சஞ்சரித்துக் கொண்டிருக்கும் பிராணன் யானல்லேன். என்னை? வாயுவின் விகாரமாயிருத்தலினுனும், உள்ளி

லும் வெளியிலும் போக்குவரத்துடைத்தா யிருத்தலினானும், சடமாயிருத்தலினானும், பர தந்திரமாயிருத்தலினானும், சாவயவமாயிருத்த லினானும், எனதெனக் காணப்படுதலினானும் என்க. யான் பிராணனை விவகரிக்கச்செய்யும் உயிர்ப்புக்குத் தேவனா யிருப்பவனாவேன். அத்தகைய யானே ஓடி வாடு முயிர்ப்புக்குச் சாக்ஷிபா யிருக்கின்றேன் என்றுண்டாம் திட நிச்சயத்தால் (உயிர்ப்புக்குத் தேவனாந்தன்மை யானே ஜீவனைக்காண்பித்து அதன் சாக்ஷித் தன்மையானே அதற்குப் பரிபூரணபாவம் காண்பிக்கப்பட்டதாமென வுணர்ந்து கொள்க. யாண்டும் அபிமானத் தன்மையானே பரிச் சின்னபாவமும், அபிமான ரகிதத்தன்மை யானே அபரிச்சின்னபாவமும் ஆமென அறி ந்துகொள்ள வேண்டியது) பிராண தர்மங்க ளாய பசிதாகங்களின் உபசாந்தியானது கூடு மென்க. என்னை? பிராணனோடபிமானத்தை யடைந்து விவகரியாது சமாதியுறினும், பிராண னது தர்மங்களிவையே யன்றிச் சான்றாய நந் தருமங்களிவை யன்றாமெனத் திரமுற வுணரி னும் அவற்றின் உபசாந்தி கூடலின் என்க. என்னுமிவற்றையே வேதாந்த பேரியானது டிம் டிம் என யாவருமினிது கேட்ப முழக்கு மென்ப. 43

44. மனமு நானல ஞனரு மகிழ்தருந் தேவன்
மனமோ ளிர்கரி யாமேன வயங்குநிச் சயத்தான்
மனவ ருங்கோடேஞ் சோகமும் மோகமு மடியும்
இனம றைமுடி முரசறை டிண்டிம மிவையே.

இ-ள்) மனம் யானல்லேன். என்னே? கரணமா யிருத்தலினுனும், அன்னகாரிய மாய்ச் சாவயவமா யிருத்தலினுனும், சங்கற்ப விகற்பான்மகமா யிருத்தலினுனும், சந்ததஞ் சுழலுகையானும், எனதெனக் காணப்படுகை யானும், இதுவெனக் காணப்பட்டுச் சடமா யிருத்தலினுனும், பூதகாரிய மாதலினுனும், மற்றும் பிறவற்றானு மென்க. யானே அருமைமிக்க ஆனந்தத்தைக் கொடுக்கும் தேவனுகிய மனத்தை விளக்குங் கரியென்னுஞ் சாக்ஷிவடிவனுவேன் எனவுண்டாந் திடநிச்சயத்தால் கருமவயத்தாற் பொருந்தவாரா நின்ற சோகமும் மோகமும் மடியும்; மடியவே, சுகவடிவமா யிலங்கலாம். என்னு மிவற்றையே உறவினரைப் போன் றிதத்தைப் புரியும் வேதாந்த பேரிகள் டிம்டிம் என்று முழக்கும். 44

45. புத்தி நானல ஞனெழிற் பூரணத் தேவன், புத்தி யையறி கரியேனப் பொருந்து நிச் சயத்தாற், கத்தி ருத்துவ மாதிய சடிதினி னீங்கும், இத்தி ருமறை முரசறை டிண்டிம மிவையே.

(இ- ள்) புத்தியானல்லேன், என்னை? கரணமா யிருத்தலினானும், அன்ன காரியமாயிருத்தலினானும், சாவயவமா யிருத்தலினானும், நிச்சயான்மகமா யிருத்தலினானும், பலமாயொன்றைப் பிடித்தலினானும், எனதெனக் காணப்படுகையானும், இதுவெனக் காணப்பட்டுச் சடமா யிருத்தலினானும், பூதகாரிய மாதலினானும், மற்றும் பிறவற்றானு மென்க. யானோ நித்திய சுத்த தேசகாலவஸ்து பரிச்சேசமற்ற பூரணவடிவ தேவனாகிய புத்தியை யறியுஞ் சாக்ஷியாகவே யிருக்கின்றேன் எனவுண்டாந் திட நிச்சயத்தால் ஜனன மரண சம்சாரத்திற்குப் பீஜபூதமாகிய கர்த்திருத்தன்மை முதலியன கணமாத்திரையில் இருந்த இடந்தெரியாது பறந்துபோம். என்னும் இவற்றையே இவ்வுலகத்திற் கமுதமயமாய அழகிய வேதங்களின் சிரோபாகங்களாகிய பேரி டிம்டிம் என்று யாவருங்கேட்க முழக்கும். 45

46. மாயை யானல ஞனிடர் மகிழ்வருந் தேவன், மாயை யையறி கரியேன மலருநிச் சயத்தாற், பாயு றுந்துயர் யாவுமே பஞ்சேனப் பறக்கும், ஈயு மாமறை முரசறை டிண்டிம மிவையே.

(இ-ள்) அஞ்ஞானமென்னும் அபரபரியாயம் வாய்ந்தமாயை யானல்லேன். என்னை?

சத்து, அசத்து, சதசத்து, சாவயவம், நிரவய
வம், சாவயவநிரவயவம், பின்னம் அபின்னம்.
பின்னுபின்னம் என்னும் நவவிதத்தாற் பகாற்
கேலாததாயிருத்தலினுனும், அசத்தாதலினுனு
ம், சடமாதலினுனும், துக்கமாதலினுனும், அநி
த்த மாதலினுனும், கண்டமாதலினுனும், சுருதி
யுக்தி யுலகசம்பந்தத்தான் முறையே துச்சமா
யும், அநிர்வாச்சியமாயும், உண்மையாயும்,
தோற்றுதலினுனும், சேதனத்தை மறைத்தலி
னுனும், அனர்த்தங்கட்குக் காரணமா யிருத்த
லினுனும், விபரீத ஞானத்தைப் பபத்தலினு
னும், ஞானத்தாற் கெடுதலினுனும், சங்கோச
விகாசமாயிருத்தலினுனும், சுதந்திராசுதந்திரங்
களோடுகூடி யிருத்தலினுனும் மற்றும் பிறவற்
றுனு மென்க; யானே மகிழ்ச்சி வாட்டங்க
ளற்ற மாதேவனுகிய மாயையை யறியுங் கரியா
கிய சாட்சி வடிவின னுவேன் எனவுண்டாம்
அப்பிரதிபந்தநிச்சயத்தால்அம்மாயையாலுண்
டாங் துயர்யாவும் ஆடிக்காற்றில் இலவம்பஞ்
செனப்பறக்கும். இவ்வைந்துசெய்யுட்களானும்
முறையே அன்னமய கோசமும் பிராணமய
கோசமும், மனோமய கோசமும், விஞ்ஞான
மய கோசமும், ஆனந்தமய கோசமும், கண்
டிக்கப்பட்டனவெனவுணர்க. அவற்றின் வில
ட்சண ஆன்மாவே தானெனத் திடப்படுத்திய

வாறுங் காண்க. இவற்றையே நன்மதியைக் கொடுக்கும் உபநிடதப்பேரி டிம்டிம் என முழக்கும். 46

47. இவண மியான்கரி யெனவேவ ணினி தினிற் பிரித்தே, தவமு றப்பல முறையறி தருகுவ னவனே, உவமை யின்றிய முத்தனு முயர் வித்து வானும், இவண்ம றைமுடி முரசறை டிண்டிம மிவையே.

(இ - ள்) யாவன் உற்சாகத்தோடும் இந்தப் பிரகாரம் விவேசனஞ்செய்து நான் சங்காதங்களின் சாக்ஷியெனத் தவமானது விருத்தியாகுமாறு பலதடவை யறிவனோ, அவனே ஒப்பில்லாத உயர்ந்த வித்துவானாகிய ஜீவன் முத்தனும், விதேகமுத்தனும் ஆவன்; என்னுமிவையே மறைச்சிரமுரசு டிம்டிம் எனக் கோஷிக்கும் ஓசைகளாம். 47

48. மாயை யானல ஞனதன் காரிய மலனே, தூயசான்றது நானலன் சுகபர னனே, ஆய வையமி லறிவினன் முத்தியா மாமே, ஏய மாமறை முரசறை டிண்டிம மிவையே.

(இ - ள்) அறியாப் பொருளாகிய மாயையும் யானல்லேன், குறித்தறியும் பொருளாகிய அதன் காரியவுலகமும் யானல்லேன், அறியும் பொருளாகிய சாக்ஷியும், உபாதியுபகித மாதவி

னுனும், உண்மையி லுபாதியின்மையினுனும், உண்மையிலறியப்படுபொருளும் அறியப்படாப் பொருளு மின்மையினுனும் யானல்லேன்; மற் ருே: சுத்தபூரண நித்த சுகபரனே யானுவேன் எனவுண்டாகிய அகண்டப்பிரஹ்மாகார விருத்தி ஞானத்தினுன் முத்தி சித்திக்குமென்பதிலேயமே யில்லையாம் என்னுமிவற்றையே பிராமாணிகமாயிலங்கும் பரிசுத்தமாய வேதாந்த பேரியானது டிம்டிம் என முழக்கும். 48

49. சருவ மியானல ஞனிறை சருவமு மாவேன், சருவ மென்னதிங் கென்பது சரிவெளிப் படையாம், அரிய வுண்மையை யறிந்திடி னரந்தையெங் கேயோ, இருமறைமுடி முரசறை டிண்டிம மிவையே.

(இ - ள்) யாவற்றினும் விலக்ஷணனுயிருத்தலின் யான் யாவுமல்லேன். யாண்டும் நிறைந்திருக்கப்பட்ட யாவும் என்னின் அன்னியமாயின்மையின், சர்வான்மகத் தன்மையானே, யானே யாவேன். எனது சத்தாஸ்பூர்த்தியினுனே இலங்குதலினுனும் எனது விவர்த்தமேயாதலினுனும் யாவுமிங் கென்ன தென்பது மிகவும் பிரசித்தமே யாகும்; இதிலேயப்பாடேயில்லை யென்பததன் கருத்தாம். அருமையாகிய இவ்வுண்மையை யறிந்திடில் அஃதாவது, அகமென அப்பிரதிபந்தமாய்ச் சாக்ஷாத்கரிக்கின்

*சர்வானர்த்தங்களும் யாண்டு சென்று விடு மோ அறியோம்;வாராமலே போய்விடு மென்ற படி; என்னுமிவையே மறைச்சிரமுரசு கோஷிக்கும் டிம்டிம் என்னும் ஓசைகளாமென்க.* 49

50. உடன்மு தற்பஞ்ச கோசத்துள் ளுறை யுண்மை யாதிங்,கிடர றப்போலி தருமந்த வெழி லுண்மை தானே,அடிமு டிவறு மாத்துமா வைய மே யிலையாம், இடிம றைமுடி முரசறை டிண் டிம மிவையே.

*(இ - ள்) அன்னமயாதி பஞ்ச கோசத்தி னுள்ளே யிருந்திடாற இலங்குவ தெச்சத்தை யோ, அச்சத்தையே அடிமுடியற்ற ஆன்மாவா கும். இதன் கண்ணே யாதோரையமு மின்றும் என்னு மிவற்றையே இடித்துப் புத்திபுகட்டும் மறைமுடி முரசு டிம்டிம் எனமுழக்கும்.* 50

51. மெய்ம்முத லைந்துகோ சத்துண் மிளி ரொளிர் வெதுவிங், குய்தர வனுப விப்பதவ் வொளிர்வது தானே, நொய் தறிவுறு மாத்துமா நுதலய லலவே, மெய்ம்ம றைமுடி முரசறை டிண்டிம மிவையே.

*(இ-ள்) தேகாதி ஐங்கோசத்துள்ளே விள ங்காநிற்கும் எவ்விளக்கஞ் சர்வவியவகாரயோக் கியமாய் அனுபவிக்கப்படுமோ அவ்விளக்கமே சூக்கும விருத்தியா லறியத்தக்கதும் அதி*

சூக்குமமுமாய ஆன்மாவாம். அதற்கு வேறாய் விளம்பப் பெற்றவை ஆன்மாவலவாம் என்னு மிவற்றையே உண்மையான இதத்தை யுணர்த் தும் செய்யாமொழிச் சிரமுரசு டிம் டிம் என முழக்கும். 51

52. ஆக மாதியைங் கோசத்து ளமருமேப் பிரியம், வேக மாயனு பவத்துறும் விளம்புமப் பிரியம், சோக மேதுமி லாத்துமா கூடத்தன் சுயமாம், ஏக மாமறை முரசறை டிண்டிம மிவையே.

(இ-ள்) காய முதலிய ஐந்து கோசத் துள்ளிரா நின்ற எப்பிரியம் விரைவி லனுபவிக் கவருமோ அந்தப் பிரியமே சோகமுழுதுங் கடந்த சொன்மனங் கடந்த ஆன்மாவாகிய நிர் விகாரப்பொருளாம் அதுவே சுபஞ்சோதியாம் என்னு மிவையே தனக்கொப்புயர்வற்ற மறை முடிமுரசு டிம்டிம் எனக் கோஷிக்குங் கோஷ ங்களாம். (இவை மூன்றுந் துவம்பதம் பற்றிய வாம்). 52

53. கம்மு தலிய பஞ்சபூ தத்திலே கது வும், விம்மு சத்தையா திலங்குறும் வியன்னரர் தமக்கு,அம்மரி யவச்சத்தை யேபரப்பிரமமதாம், இம்ம றைமுடி முரசறை டிண்டிம மிவையே.

(இ-ள்) ஆகாசமுதலிய பஞ்ச பூதத்தே பொருந்தியிருக்கும் சத்தையாது தோற்று

*நிற்குமோ நரர்கட்கு அருமையாகிய அச்சத்தையே பரப்பிரஹ்மமெனப்படும். (இருக்கின்றதென்பதற் கேதுவா யுள்ளது பரப்பிரமாங்கிசமாமெனவுணர்க) என்னுமிவற்றையே மறைமுடி முரசு டிம்டிம் எனக் கோஷிக்கும்.* 53

54. வெளிமுத லைந்துபூ தத்தில் விரவுமேவ் விளக்கம், வெளிவரு மோன்றவ் விளக்கமே விமலமாய் நிறைந்து, களிதரும்பரப் பிரமமாம் பொருளெனக் கவர்க, எளிம றைமுடி முரசறை டிண்டிம மிவையே.

*(இ - ள்) அம்பரமுதலிய ஐந்து பூதத்துள்ளும் கலந்து விளங்கும் விளக்கம் யாதொன்று பிரத்தியக்ஷமாயனுபவிக்கப் படுகின்றதோ அவ் விளக்கமே நின்மலமாய் நிறைந்து சந்தோஷத்தைச் சந்ததங் கொடுக்கும் பரப்பிரமமாம் பொருளெனக் கிரகித்துக்கொள்க. (விளங்குகின்றதென்பதற் கேதுவா யுள்ளது பரப்பிரமாங்கிசமென வுணர்க) என்னு மிவற்றையே எளிதாயிதத்தையுணர்த்தும் மறைமுடி முரசு டிம் டிம் எனக் கோஷியாநிற்கும்.* 54

55. விண்முத லைந்துபூ தத்துள் விரவுமேப்பிரியம், கண்மன வருமந்த நற்பிரியமே கதிர்சேர், அண்மை யும்மதி தூரமு மற்றதாம் பிரமம், எண்ம றைமுடி முரசறை டிண்டிம மிவையே.

(இ - ள்) விண் முதலிய ஐந்து பூதத்துள் கலந்து தோன்றும் பிரியம் யாது அனுபவிக்க வருமோ அந்தப் பிரியமே ஒளி பொருந்திய தும், தன்வடிவமாதலின் தூரமற்றதும், கிடைத்தற் கருமைத்தாகலின் சமீபமற்றதும் ஆகிய பரப்பிரமமென வுணர்க; (இனிய தென்பதற் கேதுவா யுள்ளது பரப்பிரமாங்கிசமென வுணர்க) என்னு மிவற்றையே யாவரும் பிரமாண மா யெண்ணித் தத்தங்கருமத்தே முயல ஏதுவாய வேத முடிமுரசு டிம்டிம் என முழக்கா நிற்கும். (இவை மூன்றுந் தற்பதம் பற்றிய வாம். 55

56. உடன் முதலிய கோசத்தி னுள்ளுறை யுண்மை,அட ரேதுவது வம்பர மாதிபூ தத்தாம், இட ரளவைய தின்மையிற் பேதம திசையா, எடுமே றைமுடி முரசறை டிண்டிம மிவையே.

(இ - ள்) தேகமுதலிய பஞ்சகோசத்தின் உள்ளே யிருக்கும் சத்தையாதோ அதுவே வியோமமுதலிய பஞ்ச பூதத்தும் இருப்பதாம். இதைப்பாதிக்கும் பிரமாண மின்மையின் யாண்டும் ஒரே விதமாய்த் தோற்று மிச் சத்தை பேதத்தையடைய மாட்டாது. இஃ தசிபதத்தை யுணர்த்தும். என்னை ? துவம்பத னுக் குபாதியாயபஞ்சகோசத்தை நீக்கியும், தற்

பதனுக் குபாதியாய பஞ்ச பூதத்தையும் உப லக்ஷணமாகச் சத்தப்பிரகிருதியையும் மாயை யையும் நீக்கியும் உபாதியற்ற ஒரு பிரமத்தை ஐக்கியவாயிலா யுணர்த்தலினென்க என்னு மிவற்றைப யாவரும் பிரமாணமா யெடுத்துக் கொள்ளும் வேத முடி முரசு டிம்டிம் என முழக்கும். 56

57. சச்சி தானந்த வுருவமாந் தன்மையி ஞனே, சிற்சி வமதே யாத்துமாச் செறியைய மில்லையாம், மேச்ச ளவைக ளளவில மிளிர்தர லானே, இச்சு ருதிமெய்ம் முரசறை டிண்டிம மிவையே.

(இ – ள்) சிவமானது திரிகாலாபாத்திய மாயும், சதோதிதமாயும், பரமப்பிரேமாஸ் பதமாயும், இலங்குவதே போல ஜீவனும் சச்சி தானந்தத்தைப் புலப்படுத்தும் அஸ்திபாதிப் பிரிய ரூபமாகவேயிலங்கலின் சிவஜீவர்கட் குப் பேதமொருகாலு மில்லையாகும்; உபாதி யின் பேதத்தாற் றோற்றினும் நிருபாதிகங்கட் கைக்கியங் கூடலில் அத்தியந்தஞ் சம்சயமே யின்றா மென்க. இவ்வூகமாத்திரமே யன்றி யா வரும் பிராமாணபூதமெனப் புகழும் வேதப் பிரமாணங்களும் அளவற்றன இவ்விடயத்தே யுள்ளனவாம்(அவற்றைக்காண விரும்பின் அவ ற்றை அதிவிஸ்தாரமா யியம்பும் ஸ்ரீ ஆன்ம

புராணத்தே கண்டுகொள்க) என்னு மிவற்றை யே வேதாந்த பேரியானது டிம்டிம் என நிர ந்தரம் யாவரும் கேட்ப முழக்கு மென் றுணர்க. 57

58. பெயரு ருவங்க ணியதங்க ளல்லவா யப் பிறங்கு, முயர்வ தின்றியே யெங்சணும் பிற ழ்வினை யுறலாற், பெயரு ருவங்க ளற்றவே யா வையும் பேணின், இயன்ம றைமுடி முரசறை டிண்டிம மிவையே.

(இ - ள்) ஒவ்வொரு வஸ்துவிற்குமுரிய நாம உருவமென்னு மிரண்டும் நியதமாயிரா வாம்; என்னை? தாழ்வை யடையுமாறு எவ்விட த்தும் எக்காலும் வியபிசாரத்தை யடைதலின்; அஃதாமாறு:—பொன் முதலியவற்றைக் கடக கங்கணாதிகளாக வாக்கின் அந்நாமங்களையுங் உரிய வுருவங்களையும் அடையும், கிரீடகுண்ட லாதிகளாக வாக்கினே முன்னுமை முன்னுருவங் களை யொழித்து வேறு நாம வேறுருவங்களை யடையும். இவ்வாறு கேயூராதிகளாயாக்கவா க்க நாமவுருவங்கள் பிறழ்ச்சி யடைந்துகொண் டே வரும்; எந்நாம வுருவமும் நிலைபெறுவாம். இவ்வண்ணமாராய்ந்து பார்க்கின் எல்லாப்பொ ருள்களும் பெயருருவங்க ளற்றனவாயே நிக ழும். ஒன்றற்கும் இதுதான் பெயரெனவும்

இதுதான் உருவெனவும் நிச்சயிக்க வொண்ணுமையின்; இங்ஙனமாகவே, சத்து சித்து ஆனந்தம் நாமம் உருவம் என்னும் ஐந்தன் வடிவமாய வுலகம் மாயையின் அம்சமாய் வியபிசாரத்தோடு கூடியதாய் நிகழும் நாமவுருவத்தை விடவே, யாண்டும் வியபிசாரத்தை யடையாது அஸ்திபாதிப்பிரிய ரூபமாயிலங்கும் ஆன்மாவேயாகும். அஃதாவது பொன்னுலாக்கிய கடக கங்கண கிரீட குண்டல கேயூராதிகள் இருக்கின்றன, இலங்குகின்றன, பிரியமாயுள்ளன, வெனப் புலப்படும். ஆகையினுல் தொடர்ந்துவிடாது புலப்படும் சச்சிதானந்த மயமே யிவ்வுலகமாகும் என்பதாம். அஃது இத்தன்மையானே பூரணமாம்; பூரணத்தன்மையானே நித்தியமாம்; அதுவே தானும்; தானேயதுவாம்; என்னுமிவற்றையேபிராமாணிகவியற்கையோடு கூடிய வேதாந்த முரசங்கள் டிம்டிம் என முழக்கா நிற்கும். 58

59. திருவு றுஞ்சிவ சீவரின் பேதமோதேரிக்கின், மருவு றம்விளக் கத்திஞன் மன்னுருவிளக்க, வுருவி ஞனேழின் மானமா முய்த்துணரேனவே, இரும றைமுடி முரசறை டிண்டிமமிவையே.

(இ - ள்) சச்சிதானந்த நித்திய பூரணமாய சிவத்திற்கும் சீவனுக்கும் உண்டெனப்

பேதையர் பிதற்றும் பேதமானது விளக்கத்தி ஞனே பார்க்கின் பொருந்தாதாம்; என்னே? சிவ மிலங்குகின்றது போலவே சீவனு மிலங்கலின் இங்ஙன மிலங்கல் வடிவமே அவ்விரண்டன் அபேதத்தே பிரமாணமாகும் என்னு மிவற் றையே பெருமை வாய்ந்த வேதாந்த முரசமா னது டிம்டிம் என முழக்கும். 59

60. துரிய நற்சிவசீவரின் பேதமோ துணி வாய்ப், பிரிய மாம்வடி வத்தினு னின்றெனப் பிறங்கும், பிரிய பேதத்தில் மானமின் றெனப் பேரி துணர்க, இரும றைமுடி முரசறை டிண் டிம மிவையே.

(இ - ள்) நனுக்கனுந்துயில் என்னும் மூன் றைக் குறித்து நான்காவதாயிலங்கும் சிவத்திற் கும் ஜீவனுக்கும் உண்டெனப் பேதையர் பித ற்றும் பேதமானது பிரியத்தினனே பார்க்கின் பொருந்தாதாம்; என்னே? சிவம்பிரியமா யிருக் கின்றது போலவே சீவனும் பிரியமா யிருத்த லின்; அஃதாமாறு:—யாவற்றினும் தானே பிரி யன், தன்னை யணுகவணுகப் பிரியமதிகரிக் கும், தன்னிற்றூரமாய்ப் பிரியப்பிரியப் பிரியங் குறையும் என்பதையும் தானே பரமப் பிரியன் என்பதையும் இத்திட்டாந்தத்தாற் காண்க. பொருளைக் கைவிட்டுப் புதல்வனைக் காப்பன்,

பஞ்ச காலத்தே புதல்வனை விற்றுத் தேகத்தை காப்பன், காற்று முதலிய வற்றே தேகத்தை விட்டு இந்திரியங்களைக் காப்பன், சிரச்சேத முதலிய அரசதண்டனை வந்த காலத்தே இந்தி ரியங்களை விட்டுப்பிராணனைக் காப்பன், பிராண ஹானிவருமிடத்தோ என் பிராணனைத் தானேவாங்குவன் வேறென்னை என்ன செய் வன் எனத் தன்னை விடாது பிடித்தலின் தானே யதிகப் பிரியனன்றோ! சிவம் தன்னி னன்னியமன்றாதலின் பரமப் பிரியத்திற் கிட மாமாறு முப்த்துணரத்தக்கதாம். பிரியபேத த்தே பிரமாண மின்மையின் சிவமே சீவனும் சீவனே சிவமாவன் என அகண்டப் பிரஹ் மாகார விருத்தியின் னுணர்க என்னு மிவற் றையே மாட்சிமை தங்கிய பூச்சிய வேதத்தின் முடிமுரசு டிம்டிம்என முழக்குமென்றுணர்க.

61. துதித ருஞ்சிவ சீவரின் பேதமோ துகள் சேர்ந், துதித ரும்பெயர் வடிவம தாவுள தாகா, அதமு றும்பெயர் வடிவமோ பொய்யதா மதனுன், இதம றைமுடி முரசறை டிண்டிம மிவையே.

(இ - ள்) யாவரும் மறைகளுந் தேவரும் போற்றும் சிவத்திற்கும் ஜீவனுக்கும் உண்டெ னப் பேதையர் பிதற்றும் பேதமானது குற்றத்

தோடு கூடிச் சீவன வியவகாரத்தாற் சனித்த ஜீவனென்னும் பெயரானும், அந்தக்கரணவச் சின்ன அல்லது அவித்தியாவச் சின்ன வடிவத் தானும், உபதேச நிமித்தமாயும் பஞ்ச கிருத் தியாதிகளை முன்னிட்டும் ஏற்பட்ட சிவ ஈசுவ ரப்பெயர்களானும், மாயோபகித மாயாவிசிஷ்ட வடிவத்தானும்உண்டாக மாட்டாதாம். அந்நாமவுருவங்கள் உபாதியாலாயவாமாதலின் அத னைனயே அவைபொய்யா மெனவுணர்க. அற் றுபின் சிவமும் ஈசானும் பொய்யாமாலோவெ னின், அற்றன்று; அவ்விரண்டிற்கு முறையே யுற்ற மாயோபகிதத் தன்மைக்கும் மாயா விசிஷ்டத்தன்மைக்கும் உபாதியாய மாயையா னது பொய்யாம். உபாதியும் விசேஷணமும் பொய்யாகவே, அப்பொய்ம்மையை யேற்றிக் கொண்ட உபகிதமும் விசிஷ்டமும் பொய் போற்றோன்றும்; உண்மைபாயோ இருபாலுஞ் சேதன மென்று மழியாததேயாமெனவுணர்க. இவ்வாறே யந்தக்காணவிசிஷ்டத்திடத்தும் உப கிதத்திடத்தும் பிரித்து மயலற வுணர்கஎன்னு மிவற்றையே மறை முடிப்பேரி டிம்டிம் என முழக்கா நிற்கும். 61

62. அறிவு ருச்சிவ சீவரின் பேதமோ வணு காப், பெறுபி ரமவண் டத்தோடு பிண்டவேற் றுமையான், உறைச மட்டியும் வியட்டியு மோ ருமையா தலினே, இறைம றைமுடி முரசறை டிண்டிம மிவையே.

(இ - ள்) சிற்சொரூபமாய் விளங்கும் சிவத்திற்கும் ஜீவனுக்கும் உண்டெனப் பேதையர் பிதற்றும் பேதமானது பிரமாண்ட பிண்ட வேற்றுமையானே யுண்டாகாதாம். என்னே? பிரமாண்டம் சமஷ்டியும், பிண்டம் வியஷ்டியும் ஆகி அவ்விரண்டும் ஏகமாயிலங்கலின். கருத்திதுவாம்:—பிண்டத்தி லுள்ளவையே அண்டத்திலும் அண்டத்திலுள்ளவையே பிண்டத்திலு மிருக்கின்றமையினுனும் பஞ்சபூத காரியமாய் இரண்டு மிருத்தலினுனும் மற்றும் பிறவற்ருனு மிரண்டு மொன்றேயாம். விசுவ தைஜசப் பிராஞ்ஞ வடிவமாய்ப் பிண்டத்தைத் தாங்கும் அபிமானியே விராட் இரண்ய கர்ப்ப அந்தரியாமி வடிவமாய்ப் பிரமாண்டத்தைத் தாங்கும் அபிமானியாதலின், பிண்டப் பிரமாண்டாவச்சின்ன சேதனமும் ஒன்றே யாய்ப் பேதத்தை யடையாவா றுய்த்துணர்க. என்னுமிவற்றையே இறைவன் அநாயாசமாய் ஆற்றியருளிய எழுதாமறையின் சிரமுரசம் டிம்டிம் என முழக்கிக்கொண்டேயிருக்கும். 62

63. பிரமமேயுண்மை பேரிதுழ லுலகமோ பொய்யாம், பிரம மேயுயிர் பிறிதல விதனைமெய் யுணர்ந்த, அரிய வித்துவான் சீவனின் முத்தனே யாவன், இரும றைமுடி முரசறை டிண்டிம மிவையே.

(இ - ள்) முன்னின்மை பின்னின்மை, முற்று மின்மை, ஒன்றொன்றன்மை என்னும் நான் கபாவங்களும் விடுபட்டிருப்பதாற் பிரஹ்மமே நித்திய வத்துவாம். இத் தன்மையினானே பரி பூரணத் தன்மையும் உள்ளவாறிவ்வாறும்:— முன்னின்மை பின்னின்மைகளின் எதிர்மறை யாய கால பரிச்சேத மின்மையினானும், முற்று மின்மையின் எதிர்மறையாய தேச பரிச்சேத மின்மையினானும், ஒன்றொன்றன்மையின் எதிர் மறையாய வஸ்து பரிச்சேத மின்மையினானும், பரிபூரணத் தன்மையுறுமென்பதாம். முக்காலத் தினும் பாதிக்கப்படாத வுண்மை வத்துவு மாம்; என்னை? தூல சரீரம் பாதிக்கப்பட்ட கனவினும், சூக்ஷ்ம சரீரம் பாதிக்கப்பட்ட துயிலினும், காரண சரீரம் பாதிக்கப்பட்ட சமாதியிலும் யாதொன்றாலும் பாதிக்கப்படா மல் பாவா பாவங்களைக் கண்டுகொண்டு சுயம் பிரகாசமா யிலங்கலினானும், சர்வப் பிரபஞ்ச சிருஷ்டி ஸ்திதி சம்ஹாரமாயினும் சான்றா கவே அதிஷ்டான மாத்திரமா யிலங்கலினானும் என்க. சந்ததந் துன்புறுவதற் கேதுவாய வுலகமோ நான்கபாவங்களோடு கூடினமை யானே அநித்தியமாயும், முப்பரிச் சேதங்க ளோடு கூடிப் பரிச்சின்னமாயும் ஜடமாயும் திருசியமாயுமிருத்தலின் அத்தியந்தம் மித்தை

யாம். சர்வ அநர்த்தங்கட்கும் பீஜபூதமாம். பரிபூரண தற்பதலக்ஷியப் பிரஹ்மமே, துவம் பதலட்சியக் கூடஸ்தராம். கூடஸ்தரே பிரஹ்ம மாம்; சிறிதும் பேதமேயின்றும் என்னு மிவ்வரிய வுண்மையை யுணர்ந்தவன் ஜீவன் முத்தனெனவும், திடப் பிரஞ்ஞனெனவும், பகவற் பக்தனெனவும், குணாதீதனெனவும், அதிவருணாசிரமியெனவும், பிரஹ்ம வித்தென வும், ஆத்மாராமனெனவுங் கூறப் பெறுவன். என்னுமிவற்றை வேதாந்த பேரியானது டிம் டிம் என நிரந்தரங் கோஷிக்கும். 63

64. சகல மும்பெய ருருவினைத் தணர்ந்த தாய்த் தயங்கும், புகழுஞ் சன்மய சின்மய பரம தாய்ப் போலியும், இகழும் வேற்றுமை யாண்டு றும் பந்தந்தா னியாண்டோ, இக மறைமுடி முரசறை டிண்டிம மிவையே.

(இ - ள்.) எல்லாப் பொருள்களும் நாம ரூபங்கள் அற்றனவேயாம்; என்னை ? அவை கற்பிதமாதலின், ஜீவர்களது மயங்கிய புத்தி பூர்வகமாய் வந்தனவாதலின், சந்ததம் பிறழ்ச்சி யுடையனவா மாதலின், இதற்கிதுதானென நியத மற்றனவாமாதலின், தொடர்ந் திலங்கா தனவா மாதலின், மாயாகாரியங்களாமாதலின், இனிதாராயின் இல்லாமற் போவனவாமாதலி

னென்க. ஆனுலிவையாவு மென்மயமாயிலங்கு கின்றன வெனின், சன்மயமாய்ச்சின்மயமாய்ப் பரமானந்தமா யென்க. என்னை ? ஆரோபங் கட் கதிஷ்டான சச்சிதானந்த சிவத்தை விடுத் துக் கதியின்மையின் அவையாவும் நாமரூப மறைப்பை நீக்கியமாத்திரத்தே சச்சிதானந்த மயமாயே விளங்குமென்பதாம். இவ்வாறாக வே உபாதியாலாய பேதமானது யாங்ஙனம் நிலவும்? உபாதி காலத்திரயத்திலு மின்றாய வழி அதனுலாய பேதமு மின்றென்றபடி. பேதமிலதாகவே அதனுலாய பந்தந்தான் யாங் ஙனம் நிலவும்? பேதமே பந்தகாரண மென்ப தொருதலை யாதலின். என்னு மிவற்றையே இகத்தும் பரத்தும் சுகத்தை யருத்தும் வே தாந்த பேரியானது டிம்டிம் என முழக்கும்.

65. திண்மை யாகிய வடுவோடு குலட மாதியவாம், தண்மை யாம் பெயர் முதலவற் றாற்பிற முதலின், உண்மை யாகவோ வுலகரிங் கேவற் றையு முரையார், எண்ம றைமுடி முரசறை டிண்டிம மிவையே.

(இ - ள்.) திடமாய் உலகர் விவகரிக்கும் வடுகுலடன் முதலிய பெயர் முதலியவற்றால் உண்மையாய் ஒன்றையு முரையார் ; என்னை? வியபிசார மெய்தலின். (முன் விரித்தவற்றை

யுரைத்துக்கொள்க) என்னுமிவற்றையே யாவ ரும் பிரமாணமா யெண்ணிக் கையாடும் மறை முடி முரசானது டிம்டிம் என முழக்கு மெ ன்ப. 65

66. விரி பெயரோடு முருவமாம் வடிவுடை விசுவம், பெரிய விந்திர சாலமேன் றறிந்தனர் பெரியோர், ஒரு பெயரிலாத் தன்மையா லோவ் வுரு வதனுன், இரு மறைமுடி முரசறை டிண் டிம மிவையே.

(இ - ள்.) விஸ்தாரமாகிய அநந்த நாம வுருவங்களோடு கூடி யிலங்கும் பிரபஞ்சமா னது வித்தையாடியாற் காட்டிய விரிநக ரொ ப்ப மனோமயக்கத்தாற் றோற்றும் மகேந்திர ஜாலமாம் எனப் பிரஹ்மத்தைத் தம்முருவென வுணர்ந்த பெரியார் அறிந்தானந்தித் துளார். ஜகம் மானசமல்லா தொழியிற் றுயிலினுமன் றோ தோன்றவேண்டும்? அங்ஙனங் காணுமை யின் மானசமேயாமாதலின் மனத்தை யொடுக் கிச்சுகமுறல்வேண்டும். ஜகம் மகேந்திரஜாலம், நியதமாய பெயரும் உருவமு மின்மையின், பொருத்தினும் பொருந்தாமையின் எனக் கொள்க. என்னுமிவற்றையே பிரமப் பிரமா தாதி பௌருஷேய குற்றங்களற்ற அபௌரு ஷேய மறைமுடிமுரசு டிம்டிம் எனக் கோஷி க்குமென்ப. 66

67. பேத மின்றிய தரிசனம் பேரின்ப வீடாம், பேத மொன்றிய தரிசனம் பெருஞ்சமு சாரம், ஈதே லாமறை முடிபின்சித் தாந்தம தெனவாம், வேத மெய்ம்முடி முரசறை டிண் டிம மிவையே.

(இ - ள்.) பஞ்ச கோச விலக்ஷணமாய் அவஸ்தாத்திரய சாக்ஷியாய் தேகத்திரய விய திரிக்தமாய்த் தன்னைத் தரிசித்துப் பின் சர் வோபாதிரகித பரிபூரண பரமான்மாவாகத் தன்னைக்கண்டு அத்தகைய தன்பாற் றோற்றும் சொன்மாத்திர வுலகைச் சின்மாத்திரமாய தன் மாத்திரமாய்க் காணும் பேதமின்றிய அபேததரிசனத்தானே என்றுமழியாத பே ராநந்த வீடுகிட்டும். இவ்வாறல்லாது சுருதி க்கு முரணாய்த் தன்னையும் சிவத்தையும் ஜகத் தையும் வேறுவேறாய்க் காணும் பேததரிச னத்தானே என்றும் மாறாத சம்சாரதுன்பமே கிட்டும். இதுதான் சர்வ வேதாந்த சித்தாந்த மாம் என்னுமிவற்றையே மறைமுடிமுரசு டிம் டிம் எனக் கோஷியா நிற்கும். 67

68. அதி சுகமதா மான்மமெய் யறிவிஞ னன்றி, மத வபிநிவே சத்திஞற் பாடைகண் மகிழ்வாய்த், தித முறப்படித் தாடலாற் றெய்வவீ டெய்தா, இத மறைமுடி முரசறை டிண்டிம மிவையே.

(இ - ள்.) சுகவடிவமாகிய பிரஹ்மான்ம ஐக்கிய ஞானமொன்றினுனே அதிசுகத்தை யடைதல்கூடும். என்னே? பரிச்சின்னத்தே யெப்போதும் பயமேயிருத்தலினுனும், பயமுற்ற விடத்தே துக்கமேயல்லாமல் சுகலேசமுமின்மையானும், சுகம்போற் றேற்றினும் கணத்தே யழியும் சுகாபாசமே யல்லாது மெய்ச்சுக மன்ருதலினுனும், ஆராய்ந்து பார்க்கின் அதிப்பிரியம் பரிபூரணமாயதன் வடிவமே யாதலினுனும் அழிவில்லாதது சுகமாகுமே யல்லாது அழிவுடையது ஒருகாலும் சுகமாகாதாகலினுனும், அனுபவத்தும் சர்வசாக்ஷியாயிருந்து விளங்கிக்கொண்டிருத்தலே சுகமாகக் காணப்படுகின்றமையானும் என்க. இவ்வான்ம ஞானமொழித்து மற்றுமுள்ள சைவ வைஷ்ணவாதி மதாபிநிவேசத்தாலேனும் அதிகுசலத்தோடும் பலபாஷைகளை யறிந்து கிரந்த வியாக்கியான வுபந்யாச கௌசலத்தன்மை யாலேனும் தெய்வத்தன்மையோடு கூடி விளங்கும் அனர்த்தநிவிருத்தி ஆனந்தப்பிராப்தி வடிவமோக்ஷமடைய முடியாதாம். என்னே? மதானுஷ்டான மாத்திரத்தைச்செய்து ஈசுவர கிருபையைப் பெற்று மோக்ஷத்தையடையாது பிறர் மதத்தே மாற்சரியங் கொண்டு தம்மதங் கெடுமென அபிநிவேசங்கொண்டு நிந்தித்து வாடுதலின்

வீண்காலம் கழித்தொழிபா வனர்த்த மெய்த
லே கைகூடுமாதலினாலும் இராகத்வேஷ வாச
னையே யிடைவிடாது மனத்தின்கண்ணே குடி
கொள்ளுமாதலினாலும், ஈசுவர கிருபையைப்
பெறுதலே யரிதாதலினாலும், பெற்றோருண்
டெனினும், அவர் ஜீவர்களோடன்றி நேரே
பரமனிடத்தே துவேஷத்தை வைத்துப் பத்தி
செய்தனராதலினாலும், பரமனாகார விருத்தி
யை நிரந்தரம் உண்டுபண்ணுதலாற் பயன்படக்
கூடியதே யாதலினாலும், அன்றியு மத்தகையர்
ஓரோர் காரணம் பற்றிச் சாபானுக்கிரகவயத்
தால் வந்தவராதலினாலும் அவர்நடந்தது அசா
தாரணமாதலின் நம்மனோர்யாவருக்கும் அஃதே
வழியன்மையானும், பிறநிந்தையிற் பயனின்
மையானும், குறித்தவொன்றையே தியானித்
தல் கடனாதலினாலும், ஸ்ரீ வியாசாதிகட்கும்
அஃதே திருக்கருத்தாதலினாலும், வேதசாஸ்
திராதிகள் படித்துப் பொருள் கைக்கொண்டு
தன்னான்ம வடிவத்தைக் கைக்கொள்ளாதொழி
யின் கேவலம் வயிறு வளர்க்கும் வியாபாரமே
யஃதாதலினாலும், கேவலம் ஜீவன் முக்தனா
யிருந்தான் மாத்திரம் பரோபகாரப்பொருட்டு
ஈசுவரானுக்கிரகத்தால் அவற்றிற் றலைப்படலா
மே யன்றி வேறுவகையால் இடம்பாகங்கார
ஏதுவே யஃதாதலினாலும்தன்பொருட்டன்றிப்

பிறர்பொருட் டியற்றுவது துயிலொழித்துச் செய்யும் நாடக சமானமாகு மாதலினுனும் மற்றும் பிறவற்றானுமென்க என்னுமிவற் றையே இதத்தை யுபதேசிக்கும் வேதாந்த முரசு டிம்டிம் எனக் கோஷிக்கும். 68

69. காமி யத்தோடு நிஷித்தமா தியகன் மங் களினுற், சேம முத்தியின் வாதனை சேனித் தலோ விலையாம், தேம லர்ச்சிவன் றிருவரு ளத னிஞ னதுவாம், ஏம நன்மறை முரசறை டிண் டிம மிவையே.

(இ - ள்.) காமிய, நிஷித்த, பிராயச்சித் தாதி கருமங்களாற் கேவலம் கர்த்தவ்ய போக் தவ்யாதி புத்தியும் தேகாபிமானமும் இடப் பட்டுப் பந்தமேற்படுமேயன்றிச் சுத்தவாதனை யா லெய்து முத்தியுண்டாக மாட்டாதாம். வாசனை நிறைந்த மலர்களாலருச்சித்தேத்தும் சிவபெருமானுடைய திருவருளால் அம்முத்தி யானது பிரஹ்மான்மஞான வாயிலாய்ச் சுலப மாய்க் கிடைக்கும் என்னுமிவற்றையே மகா மாட்சிமை தங்கிச் சர்வப் பிரமாணங்கட்கும் பிரமாண பூதமாய் இலங்கும் வேதாந்த பேரி யானது டிம்டிம் என முழக்கா நிற்கும். 69

70. அறிவு ருவினை யறிதரா விடிலரும் பிறவி,வேறிது போய்விடு மறிதரி னேவியன் பய

னேச், சேறித ருமறி பவர்க்கறி வுருவல சேய்ம் மை, இறைம றைமுடி முரசறை டிண்டிம மிவையே.

(இ - ள்.) அறிவுருவினை மனுஷ ஜன்ம மெடுத்தும் அறியாவிடின் அவன் பிறவி பய னற்றதாம்; எடுத்து வாளாபோயொழியும். தூல சூக்ஷும சர்வபதார்த்தங்களையும் சந்தத மறிந்துகொண் டிருக்கு மறிவினை யறியாத தாச்சரியமேயாகும். என்னை? இவ்வுலகத்தே பருத்தேன் இளைத்தேன் முதலாக அறிவேன் அறியேன் ஈறாகக் கண்டுகொண் டிருந்துங் காணே னென்கின்றமையின். சர்வ வஸ்துக்க ளின் உண்மை யின்மைகளை யறிந்துகொண்டிரு க்கு மறிவே என துருவமெனத் திடதரமா யுறைக; அவ்வாறு நாட்பட நாட்பட சிவானு பவச் செல்வமுண்டாய்விடின் சர்வதுயர்களுந் தீர்ந்து என்றும் பேரானந்தப் பெருங்கடலிற் குளித்துலவலாம். ஆனாலத்தகைய அறிவை யறிந்து சுகிக்க அவ்வறிவு யாண்டையதோ வென மயங்கற்க; மற்றேறு, அறியவேண்டுமென விழைந்து தேடுபவர்க்கு அவர் உருவமாயே யிருத்தலின் மிகு சேய்மைத்தலவாய் அத்தி யந்தம் அண்மையதேயா மென்றறிந்துகொள்க என்னு மிவற்றையே நம்மனோர்க் கறிவுதந் தாள்வான் நங்கருணைத் தந்தையாகிய பரமே

சுவரனுல் அநாயாசமா யியற்றிய வேதசிகரமா கிய பேரியானது டிம்டிம் என முழக்கா நிற்கு மென்ப. 70

71. திகழ் தசமன்றன் றடையறு முணர் வதிற் றியக்கம், இகழ் பரிசிர மமதிலை யெங் ஙனே யங்ஙன், மகிழுந் தற்பிர மான்மவிஞ் ஞானத்தின் மருவும், இக மறைமுடி முரசறை டிண்டிம மிவையே.

(இ - ள்.) தன்னை நவமனென நினைந்து தசமனைத் தேடிய புமான் ஆப்தன் வாக்கியத் தால் நானே தசமன் என வுணர யாதொரு மயக்கமும் காய வாங் மன பரிசிரமும் இன்றும். அவ்வாறே தன்னைத் தேகாதியென நினைந்து திரிந்தவன் ஆசிரியரது மகாவாக்கிய வுபதேசத் தால் தன்னையறியும் பிரஹ்மான்மைக்கிய ஞான த்தே யாதொரு மயக்கமும் பரிசிரமுமின் றும்; அன்றியும் மிகுந்த மகிழ்வும் உற்சாகமு மே யுண்டாய் லீலைமாத்திரமே யாகும். ஆயின் மிகவும் பிரயாசமுளதெனக் கீதைமுதலிய வற்றே கீர்த்தித்தல் மலினவாதனையுள்ளவனைக் குறித்தே யன்றிப் பிறவல்ல. சுமைசுமத்தல் துன்பமேயன்றிச் சுமையெறிதல் துன்பமன் றன்றே என்னுமிவற்றையே இகலோகத்தும் பரலோகத்தும் சுகத்தையே பயக்கும் சுருதி சிகாமுரசானது டிம்டிம் என முழக்கும். 71

72. அழியு பாதிக ளாற்றுறு மாசனைத் தினி லும், ஒழிநோ தமலுற் றுறும்பொரு ளுறுவது போன்றே,கழிதி ருசிய நினைவறக்கருதுக பிரமம், எழின்ம றைமுடி முரசறை டிண்டிம மிவையே.

(இ - ள்.) குற்றமிலாத பொருளே யுல கத்தின்றுதலின், பொருள்களிடத்தே யுற்ற தோடங்களை யுபேக்ஷித்து உலகர் பொருள் களைக் கவர்வதேபோலத் துயரைத் தினந்தரும் திருசிய விஸ்மரணத்தைச் செய்து சந்ததம் தற்பிரமானந்த வடிவத்தையே சிந்தை செய் திடல் வேண்டும். குற்றத்தோடு கூடியிருக்கின் றனவே பொருள்களென வுலகர் உபேக்ஷியாத தேபோலத் திருசியத்தோடு கலந்து நிற்கின்ற தேதற்சொரூபமென அதிகாரி பின்வாங்கலாகா தென்பதாம் என்னுமிவற்றையே சப்தார்த்தங் களால் இனிமையும்அமிருதத்தன்மையும் வாய் ந்து எழில்பெற்றுள்ள வேதாந்தமாகிய பேரியா னது டிம்டிம் என முழக்குமென்ப. 72

73. இன்ப மற்பம்வல் லிடர்மிகும் விட யமே வுவரா, மன்பி னர்க்கு மெய் யனந்தமா மரியவா நந்தந், தன்ப ரம்பிர மந்தனிற் றனித் துறை பவர்க்கே,என்ப ரன்மறை முரசறை டிண்டிம மிவையே.

(இ - ள்.) விடயத் தன்புற்று அதைமேவ நினைபவர்க்கு இன்பம் அற்பமாய்; துன்பமோ,

அளவிறந்ததாம் ; விடம் விரவிய மதுவுக்கு நிகராம் விடயங்களாதலின். "இன்பமணுவா மிடாதற்கோ மாமலையா"மெனவும், "வலையரிடு கண்ணியிற் பருந்தின்வாயரவு மண்டுகங்கொள் சிறுபறவை நுகர்நறவை மானுமே" யெனவும், "வான்மீ திறந்தவரை யுச்சிவிழுவோ னிடை கொளின்ப"மெனவும் ஈண்டுய்த்துணர்தற்பால தாம். தனது வடிவமாகிய பிரஹ்மத்தின் கண்ணே அகண்டப் பிரஹ்மாகார விருத்தி யோடு கூடி நிலைபெற்று விளங்குபவர்க்கு உண்மையாய அழிவற்ற வரிய வாநந்தமென்றுங் கிட்டும் என்னுமிவற்றையே எனது வடிவமாக விளங்கும் பரமேசுவர னியம்பி யருளிய மாம றைச்சிர முரசு டிம்டிம் எனக் கோஷிக்கும். 73

74. மனு முயிரினைக கோல்லோரு வயிற் றுதித் தவராற்,றனங் தனதராற் றனயராற் றூரவா கரத்தாற், றினங் துயருற றிடங்திடங் திவலையின் பிலையா, லேனம றைமுடி முரசறை டிண்டிம மிவையே.

(இ - ள்.) ஜீவ காதகராய சகோதரரா னும், தனத்தானும், தனந்தருபவரானும், மைந் தரானும், மனைவியானும், இல்லத்தானும், நாடோறும் திடமாகத துன்புண்டாமே யல் லால் ஒருதிவலையின்பேனும் உண்டாகாதாம் என்னுமிவற்றையே மறைமுடி முரசு டிம்டிம் என முழக்கும். 74

75. துயிலெ ழுந்துபின் றுயிலுறும் வரை யொரு சிவத்தை,மயலற மிக மலர்தர மனனமே புரிக, புயனி றங்ம னரர்க்கதி சேய்மையிற் போரு ந்தா, னியன்ம றைமுடி முரசறை டிண்டிம மிவையே

(இ - ள்.) *உறங்கி யெழுந்து பின்னர் உற க்கம் வரும்வரையிலும் ஒப்பற்ற ஆனந்த வடிவ சிவத்தையே மபக்கமின்றி அஃதாவது ஐயந்திரிபின்றி அதி திடமாக மனத்தே தியா னஞ்செய்க; ஏனெனின், மேகம்போலும் கார் நிறமுடையகாலன் மனுடர்க்கு அதிதூரத் திரு க்கவில்லை யாதலின்; மற்றே அதிசமீபத்தே யிருக்கின்ற னெனவுணர்தல் கடன் என்னு மிவற்றையே அநேகவிதமாய் விரிந்ததிகாரிகட் குபதேசிக்கும் வேதாந்த பேரியானது டிம்டிம் மென முழக்கும்.* 75

76. பெருகு மைந்தேனுங் கோசங்க டம க்குமே பெரிய, அருகை யாயுற மார்த்தமு மழி வுஞ்செய் மாயை, கரிய தற்கெனல் பிரமவிஞ் ஞானமாங் கதிர்சே, ரிரும றைமுடி முரசறை டிண்டிம மிவையே

(இ - ள்.) *அன்னமயாதி ஐங்கோசங்கட் கும் அநர்த்தத்தையும் அழிவையும் செய்ய மாயை உரியையாம்; அதன் சான்றே நானென்*

றிருத்கல் பிரஹ்மஞானமாம் என்னுமிவற்றையே பிரமாணத்தன்மையோடுங் கூடியொளிராநின்ற வேதாந்த பேரியானது டிம்டிம் என முழக்குமென்ப. 76

77. நவவு ணர்வுளற் கருந்தச மத்துவ ஞான, முவமை யின்றிய வின்பினை யுதிக்குமா செயல்போ, லவமு றமுயி ரான்மனை யடைவுற லாது, மிவண்ம றைமுடி முரசறை டிண்டிம மிவையே.

(இ - ள்.) ஒன்பது பெயர்தா னிருக்கின்றூர்கள் என்னும் ஞானவானுக்குப் பதின்மனே யானென்னும் திண்மைஞானம் உண்டாகவே அது ஒப்பில்லாத பேரானந்தத்தை யுண்டாக்குவதேபோலத்தேகாதிகளையான்மாவென வுணர்ந்து துன்புறு முயிர் அறிவுருவத்தை யான்மாவென வுணரின் அவ்வுணர்வானது அழியாப் பேரின்பத்தை யடைவிக்கும் என்னு மிவற்றையே இவ்வுலகத்திற்குத் திலகபூதமா யிலங்கும் மாமறை யீருகிய முரசானது டிம்டிம் என முழக்கும். 77

78. இலகு மோன்பதின் பரமேனப் பிரத்தியக் கியங்கும், நலந வபர நன்குணர் ஞானியா மவற்கு, உலவு மந்தமெய் யுணர்விஞற் றுரியவீ டுண்டா. மிலம றைமுடி முரசறை டிண்டிம மிவையே.

(இ - ள்.) தூலசூக்ஷ்ம காரண தேகத் திரயம், ஜாக்கிர சொப்பன சுழுத்தியவஸ்தாத் திரயம், விசுவ தைஜசப் பிராஞ்ஞ அபிமானத் திரயம் என்னும் ஒன்பதினும் வேறெனப் பிரத் தியக் குருவமாகிய ஆன்மா விலங்கும்; அவ் வாறே ஒன்பதினும் பரமென ஐயந்திரிபறச் சாக்ஷியைச் சாக்ஷாத்கரித்த பிரஹ்மவித்திற் குண்டாகிய அம்மெய்ஞ்ஞானத்தால் துரியம் (நான்காவது) எனவிளங்கும் மோக்ஷமானது கிடைக்கும் என்னுமிவற்றையே சர்வார்த்தங் கட்கும் கிருகம்போற் குலவும் நிகமாந்த முரசம் டிம்டிம் என முழக்குமென ஆன்றோ ருரைப்பர். 78

79. நவமு ணர்தரப் படுதலி னவமுமா பாசம், நவவு பாதிக டம்மையும் நவவடி வமதா, யவமே னவுணர்ந் தவசிட்டந் தன்னிலே மவு னம், இவர்ம றைமுடி முரசறை டிண்டிம மிவையே.

(இ - ள்.) ஒன்பது உபாதிகளும் திருசி யங்களாய் விடயப்படுதலின் போலிகளாம்; அவ்வகையாய ஒன்பதையும் அவற்றின் வடிவோடு மித்தையென வுணர்ந் தொழி த்து எஞ்சிய வுணர்வின்கண்ணே இடைபறுது திதிபெற் றிலங்கலே மகாமவுனமாம் என்னு மிவற்றையே மேன்மையாகிய சுருதி சிகர முர சம் டிம்டிம் எனக் கோஷிக்கும். 79

80. பரப்பி ரமமாந் தன்கணே பகரனைத் தினையுந், தரப்பே றுமுறை மாறெனத் தனித்தனி யடக்கி, நிரப்பு மத்வைத வான்மனை நிதம்படித் திருப்பன், இருப்பு றுமறை முரசறை டிண்டிம மிவையே.

(இ - ள்.) தேசகாலவஸ்து பரிச்சேதரகித பரப்பிரஹ்மமாகிய தன்வடிவத்தே மயலாற் றோற்றும் சர்வதிருசிய பதார்த்தங்களையும் உண்டாகிய முறைக்கு மாறாக யாதுயாது எவ்வெதன்கண் ணடங்கற்குரியதோ அவ்வதனை அவ்வதின்கண் ணடக்கி யாவற்றிலும் வியாபித்துச் சத்தா ஸ்பூர்த்தியைத் தந்துகொண் டிருக்கும் அத்வைத ஆன்மவடிவத்தை அநுதினமுந் தானஞ் செய்துகொண் டிருப்பன் ஜீவன் முக்தன் என்னுமிவற்றையே அநாதியாயே யிருக்கும் ஆகமாந்த முரசு டிம்டிம்என அறையாநிற்கு மென்ப. 80

81. பிரதி லோமநல் லானுலோ மங்களாற் பெரிதும், உரம றுமல குற்றிட லோழிந்திட லுளத்தே, யுராமு றமிக வுன்னுற வெஞ்சுமா லுண்மை, இரும றைமுடி முரசறை டிண்டிம மிவையே.

(இ - ள்.) கீழும் மேலும், மேலும் கீழும் ஆக அத்தியந்தம் மித்தையாய உலகம் உண்டாதலையும் ஒடுங்குதலையும் உள்ளத்தின்

கண்ணே ஊன்றுமாறு நன்முக ஆராயவே உண்மைநிலை சேதித்து நிற்கும் என்னு மிவற்றையே பிராஹ்மணபாக மந்திர பாகத்தோடு கூடி விளங்கும் மறைமுடி முரசானது டிம்டிம் என முழக்கும். 81

82. நாம மோருருத் தமைபபி மானமாய் நயத்தல், தாம மீதுறை யாருயிர்க் காகுஞ்சம் சாரம்,நேம மாய்ச்சச்சி தாநந்த திருட்டிநேர் தரலே, யேம மாமறை முடியறை டிண்டிம மிவையே

(இ - ள்.) நாமரூபங்கள் பொருளென நினைந்து அவற்றை யபிமானித்து நிற்றலே ஆகத்தின் கண்ணுறை யாருயிர்கட்குச் சம்சாரமாகும். நியமமாகச் சச்சிதானந்த சிவஸ்வரூபமே யான் என்னும் திருட்டியை யடைவுறலே அசம்சாரமாகிய முத்தியாகும் என்னு மிவற்றையே எழின்மறை முடிப்பேரி டிம்டிம் என முழக்கும். 82

83. சத்துச் சித்தின்பஞ் சத்திய மெனவுரு நாம, மித்தை யென்றுணர் தரினிந்த ஞேயமேன் மிகையோ, அத்தன் வீரமெய்ஞ் ஞானவா ரியனரு ளணுகின், முத்து மாமறை முடியறை டிண்டிம மிவையே.

(இ - ள்.) இவ்வுலகின்கண்ணே கலந்து விளங்கும் அஸ்தி, பாதி, பிரியம், நாமம்,

உருவம், என்னுமைந்தனுள் முதன் மூன்று அம்சம்சத்தியமெனவும் அதுவேயானெனவும் மற்றைய இரண்டம்சத்தையும் மித்தையென வும் அறிந்து நீக்கிவிடின்,தோற்றமாத்திரமாம் இவ்வுலகம் எம்மாத்திரம்? எஞ்செய்யும்? மித் தையாகத் தோற்றுமானுற் ருேற்றுகதானிது; அத்துணையாற் றத்துவ வித்தாகிய எனக்குண் டாம் ஹானி யாதாம்? சித்தமயக்கத்தா லுண் டாம் கனவின்கண்ணே அச்சத்தைத்தரும் யானைமுதலியவை தோற்றினும் இது சொப் பன மெனக் காண்போனுக்குப் பீதியை யுண் டாக்குமா என்? சர்வலோக கருத்தாவாகிய வீரம் பொருந்திய ஸ்ரீகணேசப்பெருமானுகிய ஞானுசிரியருடைய பூரணகிருபை யிருப்பின் சுலபசபலமாம் என்னுமிவற்றையே பழமையா கியமறைமுடிமுரசு டிம்டிம் எனக்கோஷிக்கும்.

84. உடைய தாலம்ப மன்றுநி ராலம்ப மலவா, மடைய வேபற்றி நிற்றலுக் காதர வா குந்,தடையி லாலம்பத் தாற்சரு வாலம்ப மா மென், றிடைய றமறை முரசறை டிண்டிம மிவையே.

(இ-ள்.) உண்மையாய திருட்டியா லாரா ய்ந்து நோக்கின் சைதன்ய சிவமானது பற்றுக் கோடுற்றதும் அற்றதும் அன்றும்; ஆயினும், அவித்தையின் சம்சர்க்கத்தால் எல்லாப் பற்

றுக்கோடுகளேயும் பற்றிநிற்பதாம். உலகிற் காணும் காரண காரியப் பற்றுக்கோடோ வெனின்? இதன்பற்றுனே எல்லாப்பொருள்களும் இருந்துவிளங்கியின்பாகித் தத்தமதுகாரியவர்க் கங்கட்கு ஆதாரவாய் நிற்கும் என்னு மிவையே இடையீடின்றி மறைமுடி முரசானது டிம்டிம் என முழக்கும் முழக்கங்களாம். 84

85. செய்செ யலிலே தேரியவேண் டியதி லேச் சிவமே,ஐய யாவையு மேனவனு தினமன நினேந்தே, மைய லின்றியேவ் வணஞ்சுக மவ்வ ணம் வாழ்க, எய்ய ருமறை முரசறை டிண்டிம மிவையே.

(இ – ள்.) இவ்வுலகத்தே செய்யத்தக்க செயல்கள் யாதொன்றுமிலே, அறியவேண்டிய வத்துவும் யாதொன்றுமிலே மைந்த! தோற்று நின்றயாவையும் அறிவுருவமாகிய சிவமேயென நாடோறும் சிந்தித்தே மயக்கமின்றி எவ்வா றிருந்தாற் சுகமுறலாமோ அவ்வாறிருக்கக் கடவாய் என்னுமிவற்றையே சர்வ விதிகளேயும் விதிக்கும் அருமறை முடிமுரசு டிம்டிம் என முழக்கும். 85

86. அறிவு டையரு மன்னிய சீவருந் தமது, நெறியு ரம்விணேக் கயிறதன் வயமதாய் நிகழ்வ,ரறிவு டையவர் சுகமதாய்ப் பொழுதினே யயில்வர், இறைம றைமுடி முரசறை டிண் டிம மிவையே.

(இ - ள்.) விவேகியரும் அவிவேகியரும் நிச்சயமாகத் தத்தமது கருமக்கயிற்றின் வயப்பட்டு விவகரியா நிற்பர்; ஆனால் விவேகியரோ இன்பமாகவே பொழுதைப் போக்குவர்; அவிவேகியரோ துன்புற்றுக் காலங்கழிப்பர் என்னு மிவற்றையே இறைவன் றந்த மறைமுடிமுரசு டிம் டிம் என முழக்கும். 86

87. துருவ மாயறி வுடையவன் றுகளுறு செயலி,லேரிசெ யலிலா விடத்துள மிகழ்வுற வழலேல், சருவ மாத்துமா வெனுந்தன் யுணர்வுதன் ஞனே, இரும றைமுடி முரசறை டிண்டிம மிவையே.

(இ - ள்.) நிச்சயமாக அறிவுறு பெரியோன் செயலின் கண்ணும் செயலிலாமையின் கண்ணும் யாவருமிகழுமாறு மனந்தபிக்கலாகாதாம். மற்றோ, சருவமும் சிவமாகிய ஆன்மாவேயாம் என்னும் ஒப்பற்ற ஞானத்தானே மனச்சாந்தி யுற்றிருக்கவேண்டும் என்னுமிவற்றையே பெருமைபொருந்திய மறைமுடி முரசானது டிம்டிம் என முழக்கும். 87

88. கரும மானது பொய்யுபா திமையுடைக் காணு, முருவு யிரையுந் தோடலரி துண்மையிற் றேனே, பிரம மாகிய நின்மல பீடத்தை யெங்ங,னிரும றைமுடி முரசறை டிண்டிம மிவையே.

(இ - ள்.) அறம்பாவங்கள் என்பவை சுயமாகப் பொய்யுபாதியோடு கூடியிருக்குஞ்சாக்ஷியாற் காணப்பெற்ற போலியுருவுடைய சிதாபாசனையும் தீண்டவே மாட்டா; உண்மையாக இதனையே தீண்டாதபோது அத்தியந்தம் நின்மலமாய் யாவற்றிற்கும் அதிஷ்டானமாயிருக்கும் பிரஹ்ம வத்துவைத் தீண்டுவதென்பது யாங்ஙனமாம்? ஆகாதென்க என்னுமிவற்றையே அஞ்ஞானத்தைக் கெடுக்கு மறைமுடி முரசானது டிம்டிம் என முழக்கும். 88

89. மயல்கோடபேற லமையுமந் தோமகிஞந்தாம், உயிரோ ருசிவ மெனவின்று மோண் செவிக் கினிதாய்ப்,பயம றமறை முரசொலி பகர்தரக் கேட்பேம், வியனி றைதரும் வீரசே கர முனி யருளால்.

(இ - ள்.) இதுகாலம் வரை மயக்கத்தைத் துணையாகக் கொண்டு பெற்ற பலன்போதும் போதும், அந்தோ அந்தோ! நாந்தாம் என்ன மூடத்தனத்துடன் சஞ்சரித்தோம்! விடயத் தாழ்ந்து மகிழ்ந்தோமே! நமது வடிவமானது ஒப்பற்ற சிவமென இன்றுங்கூடக் கேட்குஞ் செவிக்கு அமிழ்து வார்த்ததொப்ப இனிமையுறப் பயமற்றுச் சுருதிசிகர முரசொலியை நமதாசிரியாது திவ்யதிருவருளாற்கேட்போம்.

90. பிரதி வாதியின் பயங்கர மறைமுடிப் பேரி, தருதிண் ணோசையைத் தக்கிண மூர்த்தி யின் றயவாற், கருது மேலவர் கருத்தோடுங் கவருக களிப்பாய், விருது கொண்டெழும் வீரசேகரன்பதம் விதியே.

(இ-ள்.) பிரதிவாதிகட்குப் பயங்காத்தை யுண்டாக்கும் வேதாந்த பேரியினின்றுங் கிளம்பிய பெருந்தொனியைத் தயிரியமா யாற்றிய பெருந்தவத்தாற் கிடைத்த ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தியின் பேரருளால் ஆராய்ச்சி மிக்க பெரியோர் ஏகாக்கிர சித்தத்தோடு மிருந்து கவர்ந்து கொள்ளுக. கொளவே, அழிவில்லாத பேரானந்தம் உண்டாம் ஞானோபதேசஞ் செய்து அஞ்ஞானத்தை நீக்குவதன் பொருட்டே கொடிக்கட்டி விளங்கும் நமது ஞானசிரியாது திருவடித் தாமரையிட்ட விதியே நமக்கு விதியாம். 90

91. செய்ய வீரநற் சேகரன் றிருவடிதொழுதே, துய்ய மாமறை முடிமுர சருந்தமிழ்த் தோன்றும், ஐய மேயற வாரிய னருமறை பரவிப், பொய்யிலாமனம் பொலிதரல் புனிதர்தங் கடனே

வேதாந்த டிண்டிமம் முற்றும்

சுபம்.



# வைராக்கிய டிண்டிமம்.



காமஃ க்ரோதஶ்ச லோபஶ்ச
தேஹே திஷ்டந்தி தஸ்கராஃ
ஜ்ஞாநரத்நாபஹாராய
தஸ்மாத் ஜாக்ரத ஜாக்ரதஃ 1

ஜந்ம துக்கம் ஜரா துக்கம்
ஜாயா துக்கம் புநஃ புநஃ
ஸம்ஸார ஸாகரம் துக்கம்
தஸ்மாத் ஜாக்ரத ஜாக்ரதஃ 2

மாதா நாஸ்தி பிதா நாஸ்தி
நாஸ்தி பந்து ஸஹோதரஃ
அர்தம் நாஸ்தி க்ருஹம் நாஸ்தி
தஸ்மாத் ஜாக்ரத ஜாக்ரதஃ 3

ஆஶயா பத்ததே லோக
கர்மணா பஹுசிந்தயா
ஆயு க்ஷீணம் ந ஜாநாதி
தஸ்மாத் ஜாக்ரத ஜாக்ரதஃ 4



| நூல் | ரூ. | அ. |
|---|---|---|
| பாட்டியற்கொத்து - உரையுடன்-இதில் வச்சணந்திமாலை, சிதம்பரப் பாட்டியலின் பொருத்தவியல் மரபியல், நவநீதப்பாட்டியல் அடங்கியிருக்கின்றன | 0 | 6 |
| சர்வதரிசன சங்கிரகம் - இதில் உலோகாயத முதல் வேதாந்த மீருகப் பதினாறு மதங்கள் நிரூபிக்கப்பட்டிருக்கின்றன. | 2 | 8 |
| திருக்குறள் - பரிமேலழகருரை தெளிபொருள் விளக்கம், கருத்துரை-குறிப்புரை-2 வால்யம். | 6 | 0 |
| வேதாந்தசாராமிருதமும், அத்துவித ரச மஞ்சரி மூலம்மும்-உரையும் | 0 | 6 |
| திருமூலர் திருமந்திரம் குறிப்புரையுடன் | 3 | 8 |
| வேதாந்த சித்தாந்த சாரசங்கிரகம் | 0 | 3 |
| வேதாந்த சூடாமணி-மூலம்பாக்கெட்சைஸ் | 0 | 2½ |
| கைவல்லிய நவநீதம்-மூலம் பாக்கெட்சைஸ் | 0 | 3 |
| பக்தமாலாவசனம் | 3 | 8 |
| பஞ்சதசி-செய்யுள்-பாக்கெட் சைஸ் | 0 | 10 |
| நியாயப்பிரகாசம் | 4 | 0 |
| வேதாந்தமநந சிந்தாமணி | 4 | 0 |
| கைவல்யம்-பொன்னம்பல சுவாமிகளுரை | 2 | 0 |
| கைவல்யம்-சச்சிதானந்த சுவாமிகளுரை | 1 | 4 |
| பிரபுலிங்கலீலை-உரையுடன் | 2 | 8 |
| தத்துவ நிஜாநுபோகசாரம் | 1 | 0 |
| சர்வமத சித்தாந்தவிளக்கம் | 0 | 14 |
| திருக்குத்திருசிய விவேகம் | 0 | 14 |
| தசகாரிய மகாவாக்யம் உரையுடன் | 0 | 8 |
| பிரத்தியட்சாநுபூதி விளக்கம் | 0 | 8 |
| சிவஞானபோதம் உரையுடன் | 0 | 8 |
| வேதாந்த இலக்கணம் | 0 | 8 |
| நிஷ்டாநுபூதி-உரையுடன் | 0 | 10 |
| மகாவாக்கிய ரகசியம் | 0 | 4 |
| சொரூபசாரம்-உரையுடன் | 0 | 6 |
| வேதாந்த சூளாமணி உரையுடன் | 1 | 4 |
| சூதசங்கிதை வசனம் | 1 | 0 |

| | | |
|---|---|---|
| சித்தாந்த பிந்து | ரூ. 0 | 8 |
| வேதாந்த பரிபாஷை | 0 | 10 |
| திருவாசகம்-பாக்கெட்சைஸ் | 0 | 10 |
| நவநீதசாரம் | 0 | 8 |
| வேதாந்த சாரம் | 0 | 10 |
| அத்துவிதவுண்மை-பாக்கெட் சைஸ் | 0 | 1 |
| தருக்கபரிபாஷை-குறிப்புரையுடன் | 1 | 0 |
| மோட்சசாதன விளக்கம் | 2 | 0 |
| அறிவானந்த சித்தியார் | 0 | 4 |
| சிவமகிம்ந ஸ்தோத்திரம் | 0 | 1 |
| தோடகம் | 0 | 4 |
| மநநமாலை | 0 | 2 |
| தோத்திரக்கொத்து | 0 | 1 |
| தருக்காமிர்தமும்-பிரஸ்தான பேதமும் | 0 | 8 |
| விருத்திரத்னவலி | 0 | 12 |
| பாலபோதம் | 1 | 0 |
| விசாரசந்திரோதயம் | 1 | 4 |
| பஞ்சதசி-2 வால்யம் | 10 | 0 |
| விருத்திப் பிரபாகரம் | 4 | 0 |

**சங்கரகிரந்தாவலி**

| | | |
|---|---|---|
| அபரோக்ஷாநுபூதி | 0 | 5 |
| ஆத்மபோதமும்-தத்துவபோதமும் | 0 | 5 |
| பஞ்சீகரண முதலியன | 0 | 12 |

**கீதைக் கொத்து.**

| | | |
|---|---|---|
| உத்தரகீதை | 0 | 4 |
| குருகீதை | 0 | 6 |
| இராமகீதை | 0 | 3 |
| தத்துவமசி மகாவாக்யமும் 4மகாவாக்யமும் | 0 | 2 |
| விவேகசிந்தாமணி-வேதாந்த பரிச்சேதம் | 0 | 6 |
| கீதாசாரத்தாலாட்டு உரையுடன் | 0 | 4 |
| ஸ்ரீசங்கர நீலகண்டாசாரிய சம்வாதம் | 0 | 4 |
| தருக்க கௌமுதி | 0 | 6 |
| பிரஹ்மவிதாசீர்வாத பத்ததி | 0 | 1 |